# ஸ்ரீ நாராயண
# பிரம்மேந்திர கீதம்.

ஆக்கியோன்
S. K. இராமராசன்
"கம்பராமன்"

ஸ்ரீ நாராயண பிரம்மேந்திர மடாலயம்,
காட்டுப்புத்தூர்.

ஓம்.

கம்பநாடன்
கழல்தலை மேற்கொள்வாம்.

# நான் முகம்.

வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்!
எம்பெருமான்! என்சொல்லிச் சிந்திக்கேனே.

நம் பாரத நாட்டின் உயிர்ப்பு ஆன்ம ஞானமாகும். பாரத நாட்டின் உயர்ந்த வரையும், பரந்த கடலும், விரிந்த வனமும் ஆன்ம ஞானத்தையே போதிக்கின்றன. ஆன்ம ஞானமே பாரத நாடு; பாரத நாடே ஆன்ம ஞானம்; இரண்டும் அத்வைதம். ஆன்ம ஞானமின்றிப் பாரத நாடு தனித்து நில்லாது.

இஞ்ஞானப் பெருக்கு யாரால் என்று பெருகியதென்று கூற முடியாது. இஞ்ஞானப் பெருக்கின் தோற்ற நிலையைக் கண்டார் ஒருவருமிலர். ஆதலால்தான் இஞ்ஞானத்திற்கு யாதொரு பெயரும் அமையவில்லை. (இந்து மதம் என்பது பின்னைய பெயராகும்.) இஞ்ஞானத்தின் முதற்றலைமகன் ஆதிபகவனே.

தன்னிகரில்லாத ஞானப்பெருக்குத் தேய்வுறுங்கால் பெரியார் தோன்றுவதியற்கை. இது தொன்றுதொட்டு நிகழ்ந்துகொண்டே வருகிறது. வேத காலத்தே மகரிஷிகள் தோன்றி வேத மந்திரங்களையும், உபநிஷதங்களையும் தந்தனர்.

திகாச காலத்தே கண்ணன் தோன்றி "என்றும் புலராது யாணர் நாள் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்றும்," ஸ்ரீ கீதையைத் திருவாய் மலர்ந்தனன். கண்ணன் வாழ்ந்த காலத்திலேயே மற்றொரு பெரியார் வாழ்ந்தனர். அவரே வியாசர். அவர் உபநிஷத சாரமாய் பிரம்மசூத்திரம் விரித்தார். ஸ்ரீ கீதையும், உபநிஷதமும், பிரம்ம சூத்திரமும் தன்னிகரற்ற நூல்களாகும். இம்முத்திற நூல்களும் சச்சிதானந்தப் பெருங் கடலில் உலகம் உவப்ப எழுந்த முப்பெருஞ் சுடராகும். இவற்றின் அடிப்படையில்தான் இந்திய நூல்கள் அனைத்தும் இயங்குகின்றன.

இதிகாச காலத்திற்குப் பின், புத்தர் தோன்றி அருண் மழை பொழிந்தார்; நாடெங்கும் சீர்திருத்தம் கண்டார். புத்தரால் இந்தியா பெற்ற பயன் அளவிலடங்கா. தூர இருந்து நோக்கின் வேத ஞானமும், புத்த ஞானமும் வேறு வேறாகத் தோன்றும். உற்றுநோக்கின் மெய்ம்மை புலப்படாமற் போகாது. வேத காலத்து மகரிஷிகளின் மனத்தரும்பிய ஞானமும், புத்தர் பிரான் அரசிற் கண்ட ஞானமும் கலந்த கலவையே வேதாந்தம் ஆகும். புத்தர் பெருமானுக்கு வேதாந்தம் நிரம்பக் கடமைப் பட்டிருக்கிறது.

புத்தர் பிரானுக்குப்பின் நாட்டில் ஒரு-அரிய-சரித்திரம் என்றுமே கண்டிராத-நிகழ்ச்சி நிகழ்ந்தது. அதுவே நாயன் மார்கள் ஆழ்வார்கள் தோற்றமாகும். ஆயிரக்கணக்கான வருடங் களாகப் பெருகிய ஞானப் பெருக்கில் இவர்கள் சுவையூட்டினர்; மணமேற்றினர்; தெளிவாக்கினர். ஞானத்துக்கும் ஞானமாக விளங்கிய இப்பெரியார்கள் கீர்த்தி நிலத்தினும், நீரினும், வானி னும் மிகப் பெரியதாகும். பாரத நாடு பழம்பெருமையை மீளவும் எய்த வேண்டுமாயின் இப்பெரியார்களின் தமிழ்ப் பெருமறை குமரி முதல் இமயம் வரை முழங்க வேண்டும்.

தமிழ்ச் சான்ரேோர்கட்குப்பின் கூர்த்த மதியினரான சங்கரரும், பரந்த உளத்தினரான ராமாநுஜரும், பக்திச் சொரூபரான மத்வரும், சிவநிலை தேர்ந்த மெய்கண்டாரும் தோன்றினர். இவர்கள் அனைவரும் ஒரே குறிக்கோள் உடையவர்களே. நம் பேத இயல்பை இப்பெரியார்கள்மேல் சுமத்துவதுஅறியாமையாகும்.

காலம் பல கடந்தன. பிற்காலத்தே தாமே தமக்கு நிகராய் வேதாந்த சித்தாந்த சமரசராய் தாயுமானவர் தோன்றினர். இவர்க்குப் பின் அருட் பிரகாச வள்ளலார் தோன்றினர். வள்ளலார் வாழ்ந்த காலம் பொற்காலமாகும். இக்காலத்தில் தான் பிணங்கும் சமயத்துறை தோறும் சென்று பரம்பொருளைக் கண்ட பரம ஹம்ஸரும், மன்றேறி வாதிப்போர் வாயடங்கவே கல்விக் குன்றேறி நின்று குமுறிய கோளரியாகிய ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளும் வாழ்ந்தனர்.

வள்ளலார் வடலூரில் வாழ்ந்த காலத்தே மற்றொரு வள்ளலார் காட்டுப்புத்தூரில் வசித்து வந்தார். வள்ளலாரைப் போலவே அருட் பெருஞ் சோதியைக் காண்பித்தார். சமரச சன்மார்க்கத்தைப் போதித்தார்; மக்கள் வாழ்விலே தெய்வ மணம் கமழச் செய்தார்.

அவர் யார்? அவரே காட்டுப்புத்தூர் **நாராயண பிரம்மேந்திரர்.** பிரம்மேந்திரர் சித்தூரிற் பிறந்து இல்லறத்தை நல்லறமாக இயற்றித் தேவியின் ஆணையால் துறவு மேற்கொண்டு திருவருளியக்கத்தால் காட்டுப்புத்தூரையடைந்தவர். பிரம்மேந்திரரால் காட்டுப்புத்தூர் பெரும்பேறு பெற்றது.

நம் பிரம்மேந்திரர் வேதகால மகரிஷிகள் கண்ட மெய்ப் பொருளை அறிந்து அதன் வடிவானவர். உபநிஷதக் கருத்துக்களையே மக்கள் வாழ்விற்குப் பொருந்த எடுத்துக்காட்டுவதில்

நம் அடிகள் மிகத் திறமை பெற்றவர். நம் அடிகளின் சொற்கள் மிக எளியவை. கருத்துக்களோ மிகமிக ஆழமானவை. கருத்துக் கருத ஆழ்ந்த பொருளைத் தரும் அவர் சொற்கள் என்றும் உளங்கொளத்தக்கவை.

பிரம்மேந்திரர் வேதாந்த சித்தாந்த சமரசர். இவர் வாழ்வில் யாண்டும் சமரசமே ததும்புகின்றது. இவர் என்றும் சமயவாதத்தே புகுந்ததில்லை. சமயவாதம் எல்லாம் பிள்ளை விளையாட்டென்பது இப்பெரியாரின் பரம சித்தாந்தம்.

இப்பிரம்மேந்திரரின் வரலாற்றைக் காவியமாய் எழுத வேண்டுமென்று சுவாமிகளின் சீடரான ஸ்ரீ அமிர்தத்தம்மையார் அவர்கள் எளியேனுக்கு ஆணையிட்டனர். அவ்வாணையைச் சிரமேற்கொண்டு அம்மையாரின் நல்லாசி வழிகாட்ட அவ் வழியே சென்று இந்நூலை ஒருவாறு எழுதி முடித்தேன். இப் பெரும்பணியை எனக்களித்த அம்மையாரின் கருணைக்கு எளியேன் என்றும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்நூற்கு முதல் நூலாகிய நாராயணப் பிரம்மேந்திர சரிதம் இயற்றியவர் பெ. லோ. திருவேங்கடசாமி முதலியார். அவர் ரங்கூனில் வயிர வியாபாரம் செய்துவந்தவர், நன்கு தமிழ் மொழியைக் கற்றவர்; திருமால் மீது பெருமால் கொண்டவர்; அவர் தற்போது காஞ்சிபுரத்தில் திருமகள் தலைவன் பேரருளில் இன்புற்று வாழ்ந்து வருகின்றார்; அவர்க்கு யான் மனமுவந்து பல்லாண்டு கூறுகின்றேன்.

இந்நூற்குச் சிறப்புரை கொடுத்துதவிய ஸ்ரீலஸ்ரீ சித்பவானந்த சுவாமி அவர்கட்கும், மயிலைத் தொல்காப்பியர் பன்மொழிப் புலவர் V. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கட்கும், வித்வத் பண்டித B. R. புருஷோத்தம நாயுடு அவர்கட்கும், ஆஸ்தான கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கட்கும்,

கமிஷனர் திரு. கீ. இராமலிங்க முதலியார் அவர்கட்கும், திரு. வித்வத் பண்டித இராமகோவிந்தசாமி பிள்ளை அவர்கட்கும், என் நண்பரான வித்வான் திரு. சேந்தை ரா. மாணிக்கவாசகனார் அவர்கட்கும், அரும்பெரும் தோழராகிய இராசீபுரம் வித்துவான் திரு M. இராமசாமி அவர்கட்கும், தமிழறிஞர் திரு P. R. கந்தசாமி B. O. L. அவர்கட்கும், வித்துவான் க. முருகேச முதலியார் அவர்கட்கும், மே. செ. சின்னசாமிக் கவுண்டர் அவர்கட்கும் என் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூலை எளியேன் இயற்றுங்காலத்தே சுவாமிகளின் பெருமைகள் எல்லாம் என் உளங்கொள விரித்துரைத்த என் நண்பர் K. ஷண்முகம் (காட்டுப்புத்தூர் உயர்நிலைப்பள்ளித் துணையாசிரியர்.) அவர்களின் பேராதரவை யான் என்றும் மறவேன்.

இந்நூல் வெளிவருதற்குப் பொருளுதவிசெய்த திருவாளர் C. வேங்கடாசலபதி B. E., Asst. Engineer அவர்களும் திருமதி. சம்பத் குமாரி அவர்களும் குருநாதன் திருவருளால் நீங்காத செல்வம் நிறையப்பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு வாழ மனங் கனிந்து வாழ்த்துக் கூறுகின்றேன்.

எளியேன் இச்சரிதம் பாடத் தோன்றாத் துணையாய் இருந்து பேரருள் புரிந்த பிரம்மேந்திரரை நினைந்து நினைந்து இன்புறுகின்றேன்.

இந்நூலில் எளியேனுடைய அறியாமையாலும் மறதியாலும் நேர்ந்த குறைபாடுகளைப் பொறுத்தருளும்படி அன்பர்களை வேண்டிக்கொள்கிறேன்.

இந்நூலை அழகுற அச்சியற்றித் தந்த கருணாநிதி அச்சக அதிபர் திரு. T. K. குமரேசன் அவர்கட்கு என் அன்பு உரித்தாகுக.

ஏதங்க ளாயின வெல்லா
மிறங்க விடுவித்தென் னுள்ளே
பீதக வாடைப் பிரானார்
பிரம குருவாகி வந்து
போதில் கமலவன் னெஞ்சம்
புகுந்துமென் சென்னித் திடரில்
பாத விலச்சினை வைத்தார்
பண்டன்று பட்டினம் காப்பே.

வேலூர் (சேலம்).
கம்ப நிலையம்
23—2—56.

இங்ஙனம்,
S. K. இராமராசன்,
"கம்பராமன்"



ஓம்

# சிறப்புப் பாயிரங்கள்.



திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவன ஸ்தாபகர்

**ஸ்ரீலஸ்ரீ சித்பவானந்த ஸ்வாமிகள்**

அளித்தது.

பிரம்மேந்திர கீதம் பாடுபவர்
பிரம்மேந்திர போதம் நாடுபவராம்.

திருவாய்மொழிப் பெருக்கர் வித்வத் பண்டித

**திரு. B. R. புருஷோத்தம நாயுடு**

(பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர்)

அளித்தது.

பீடுசால் ஞானி பிரஹ்மேந் திரன் சீலன்
நாடு நலமுணரும் நன்னலத்தான் — வீடுபெறும்
சித்தத்தான் தேவி யருள்பெற் றவளடியே
அத்த மெனவடைந்தோ னய்ந்து.

அவன்சரிதை மக்கள் அறிந்துயவே நாடிப்
பவமறுக்கும் பாவாற் பகர்ந்த — தவனுவான்
பாந்த மறுக்கும் பலகலையும் கற்றுணர்ந்த
சாந்தன்சீர் ராமரா சன்.

அன்னோன் புனைந்த கவியாம் அமுதத்தேன்
என்னோரும் துய்க்கும் இயல்பினதாம் — இன்னோன்
திருமா மகள்கேள்வன் சீரார் அருளால்
பெருமா னெனவாழ்க பேர்.

பிரம்மேந்திர கீதம்

மயிலைத் தொல்காப்பியர் பன்மொழிப் புலவர்

**வே. வேங்கடராஜுலு ரெட்டியார்**

அளித்தது.

ஒருபடியால் உலகத்தில் அறம்வளர்த்த
    பசுங்கொடியாள் உள்ளத் தெண்ணி
அருள்படியால் தன்னுடைய மனைமக்கள்
    காணிபொருள் யாவும் நீத்தே
இருள்படிமா நிலமதனில் ஞானசூ
    ரியனென்ன இலங்கி வாழ்ந்த
தெருள்படிவத் தொருமுனிவன் பிரமேந்த்ர
    னெனும்பெயர்கொள் தெய்வ மன்னன்.

அன்னவன்றன் அருள்உணர்வு முதலியன
    உணர்ந்தவன்றன் அடியைச் சார்ந்து
பன்னவரும் பேரின்பப் பயன்பெற்ற
    அன்பர்சிலர் பரிவின் வேண்ட
நன்னவமார் செய்யுளினில் அவன்சரிதை
    யாத்தமைத்து நல்கி னானல்
இன்னவன்யா ரெனிற்சேல மண்டலத்தில்
    மண்டலங்கள் ஏத்த வந்தோன்.

கொங்குலவு பொழில்வரகூர் குடிகுடியா
    மாலடிமை கொண்டோன் சீர்த்தி
தங்கு கிருட்டினசாமி எனுஞ்செம்மல்
    அருந்தவத்தால் தந்த மைந்தன்
சங்கவியற் றமிழ்வல்லோன் பத்தியினோ
    டுயர்குணங்கள் எல்லாஞ் சார்ந்தோன்
எங்குலசே கரன் ராமராசன் எனும்
    உயர்பெயரின் இசைகொண் டோனே.

தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவரும் திருவையாறு அரசர்
கல்லூரித் தலைமைத் தமிழ்ப்பேராசிரியரும் ஆகிய
பண்டித வித்துவான் திருவாளர்.

## இராம. கோவிந்தசாமி பிள்ளை

அளித்தது.

நாவலந் தீவினில் ஓவலில் வளமுறும்
சேணு டரும்புகழ் சோணா டதனுள்
காவிரி வடபால் பூவிரி பொழில்சூழ்
கருத்தினுக் கிசைவுற அருத்தியா நற்பொருள்
காட்டுப் புத்தூர் கவினகர் தன்னுள்
பன்னரும் புகழ்சால் தன்னிக ரில்லான்
தன்னொளி யாலொளிர் தவப்பெருக் காளன்
தீரா நோயெலாந் தீர்த்தருள் நாரா
யணனென்று நாமம் ஆர்த்திடு மந்தணன்
பராபரை யாண்டருள் பராபர ஞானன்
திருக்கிளை யாட்டித் திருவினை யளித்தருள்
தந்திரம் பலவுணர் மந்திர வுருவினன்
மறுவறு தவத்தொடு மறுபதாண் டின்மேல்
நிட்டை கூடிய சிட்டனும் நிமலன்
தன்னருள் பெற்ற வுன்னருந் தவமுடை
யமிர்தமா யிலகுறு மமிர்தத் தம்மை
ஈன்று முறக்கழ மொழித்தொளிர் நின்மலி
தாயின் ஆணையால் தண்டமிழ் மொழியால்
ஆண்டவன் சரிதை யன்பருட் டதும்ப
பிரம்மேந் திரகீ தப்பெயர் பெற்றிட
சொற்சுவை பொருட் சுவை துதைந்து மிளிர்வுறத்
நாதலந் தன்னில் தவப்பெருக் கினர்க்கும்
நலமிகு புலமை நாவலர் தமக்கும்
விருந்தா யிலகுற வருந்தமிழ் ஆய்வுறும்
இராம ராசனென் றிசைத்திடு நாம
நற்றமிழ்ப் புலவன் நன்கினி தோர்ந்து
விரித்துரைத் தனனே மேதினி செழிக்கவென்.

காட்டுப்புத்தூர் ஜமீன்தார் உயர்நிலைப்பள்ளி
தலைமைத் தமிழாசிரியர் வித்துவான்,

**திரு. சேந்தை ரா. மாணிக்கவாசகனார்**

அளித்தது.

இனிய தமிழ்ப் பெரும்புலவன் இராமராசன்
என்னுமியற் பாவணன் எழில்வ ளஞ்சால்
கனியிலுயர் வாழைமலி காட்டுப்புத்தூர்
கருதுதவ ராசேந்த்ரன் கழலைப் பேணி
நனியுயரும் பிரம்மேந்த்ர கீத மென்னும்
நலங்கனி யும்ஒரு நூலை நல் கினனல்
புனிதமிகுக மிந்நூலைப் போற்றிப் பாடிப்
பொருளறிவார் தமிழினிமை புரிவார் நன்றே.

இராசீபுரம் மாவட்ட மன்ற உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்

**வித்துவான் திரு. மு. இராமசாமி**

அளித்தது.

இந்நில வுலகத் தியங்குபன் மொழிகளுள்
தன்னே ரின்றித் தனிப்புக ழெய்தி
இன்னமிழ் தாக இலங்குநந் தமிழின்
இலக்கிய விலக்கண மெனுநன் மதுவைக்
கலக்கி நுகரும் களிவண் டனையான்
பாநலந் தன்னைப் பார்தனக் களிக்கும்
நாநலம் பெற்ற நயனுடை யாளன்
தெளிவுறும் இராமராசனும் செம்மல்-
ஆந்திர நாட்டிடை யன்புறத் தோன்றிப்
பல்கலை கற்றுப் பார்ப்பதி யருளால்
தவக்கோ லம்பெறு தகவுசால் முனிவனும்-
நாரணன் தெய்வ நலந்திகழ் காதையை
இயற்றித் தந்தனன் ஏற்றம் சிறக்கவே.

திருச்சிராப்பள்ளி அர்ச். சூசையப்பர் கல்லூரித் தமிழாசிரியர்

## திரு. P. R. கந்தசாமி, B.O.L.

அளித்தது.

திருவருள் காக்குந் தெய்வ நலஞ்சால்
இனிய உலகின் இன்பந் தெவிட்ட
என்றும் உலவா இன்பமே நாடும்
வேட்கையீரே! வேட்கை யீரே!
ஆங்கா ரக்கராம் வீங்குவாய் திறந்து
தீங்காய்க் கௌவலூந் தூங்கு கையெடுத்து
ஓங்கா ரவோலம் பாங்காய் எழுப்ப
ஒல்லைவந் தானை தொல்லைதீர்த் தோனும்
ஓல மிட்டோர் உள்ளங் குளிர
ஆல முண்ட கால காலனும்
அம்மையும் அப்பனும் எம்மையு மாகி
ஓங்கிய விழுப்புகழ் உயர்தமிழ் நாட்டின்
தேங்கமிழ் சாரல் வேங்கடப் பாங்கர்
விளங்கு வளமார் வேட்கூர்ப் பிறந்து
வெம்பிறப் பொழிக்கும் விழைவு தழைய
ஆட்படு நாரணன் ஆர்வம் அறிந்து
வினைதரு பிறவி வெம்பிணி தீர
மலையிற் பிறந்த மருந்தென அம்மை
ஆளும் அகவையில் அன்புடன் தோன்றி
இனிமேல் உனக்குப் பிறப்பிலை என்னும்
பிணிதீர் பெருவரம் பெட்புடன் அளித்தும்
இல்லற வாழ்வின் புல்லிய இன்பில்
அழுந்தி வருநாள் ஐமுறை கனவில்
பானிலைந் தூட்டுந் தாயெனத் தோன்றி
அறுதி யோடும் உறுதி கூறியும்
ஞானம் நல்கலும் மானம் நீக்கிப்

பாசம் அவிழ்ந்த பசுவாய்த் திகழ்ந்து
தன்னகந் துறந்து தான்புறப் பட்டுச்
செம்புலஞ் சாரும் நன்புலம் ஓர்ந்து
திருவருள் காட்டுந் திசையே நடந்து
பொன்னிப் பெருவளம் மன்னித் திகழும்
காட்டுப் புத்தூர் அன்பர் காட்டிய
அன்புப் பிடியில் அடங்கி ஆங்குத்
தவம் வளம் அமுதத் தம்மை யார்முதல்
செய்தவத் தோர்க்கு மெய்யுணர் வென்னும்
தீப்பால் சுரந்து தெய்வ நிலைசேர்
காம தேனு வாம்பிர மேந்திரன்
செய்தவத் தாலே கைவரப் பெற்ற
பிறவிப் பிணிதீர் பெருமறை மருந்தில்
ஒருசிறி தெடுத்தே உவப்புடன் உண்டாந்
தீந்தமிழ்த் தேனிற் செம்மையாய்க் குழைத்துப்
பிரமேந் திரகீ தமென்னும் பெயரால்
தாயினு மினிய தகவுடன் அளிப்போன்
ஆன்றமைந் தடங்கிய சான்றோன் அன்புடன்
கலைவளர் ஆசான் நிலைதமிழ் வண்கவி
இராம ராசெனு நல்லோன் ஆகலின்
பிறவிப் பிணிகுறை பெருமமிழ் தாமிதைப்
பக்குவ மறிந்து பத்தியா உட்கொளின்
பிறவிப் பெரும்பிணி தணிந்தே
என்றும் பேரா இன்பம் இயையுமே.

---

ஆஸ்தான கவிஞர் நாமக்கல்
**திரு. வெ. இராமலிங்கம் பிள்ளை**
அளித்தது.

கழனிகள் சூழ்ந்த காட்டுப் புத்தூர்
மதியுள மக்களின் பாக்கிய வசத்தால்

உலக வாழ்க்கையின் உண்மையைக் காட்டி
மெய்ப்பொருள் அதனை மேவிடச் செய்யும்
ஞான வாழ்க்கையை நடந்து காட்டிய
நாரா யணப்பிர மேந்திர நல்லோன்
எங்கோ பிறந்து இங்கு வந்துற்றனன்
துறவற ஒழுக்கின் தூய்மையில் நின்று
இல்லறத் தவர்க்கு இரும்பயன் அளிக்கும்
அறவோர் மடத்தினை ஆக்கினன் அதனை
கண்ணைக் காக்கும் இமையெனக் காத்து
அறம் வளர்த்தருளும் அமிர்தத்தம்மையார்
பிரமேந் திரரின் பிறப்பும் வளர்ப்பும்
வாழ்க்கைக் குறிப்புகள் வகையெலாம் கூட்டும்
படிக்கொரு சரிதம் பாடிடச் செய்த
இனிமைத் தமிழ்ப்பா இந்நூல் முழுதும்
படித்து மகிழ்ந்தேன் பாடிய பாவலன்
இராமராசன் என்னும் பெயரினன்
பல்லாண்டு வாழப் பரமன் காக்கும்.

தாராபுரம் தாலூகா, கண்மலியம்பட்டி
**திரு. மே. செ. சின்னசாமிக் கவுண்டர்,**
அளித்தது.

பொன்னிநதி யார்வளத்திற் பொங்குங்காட் டுப்புத்தூர்
நன்னிலுமைத் தாயின்சொற் றன்பற்றி-பன்னரிய
மாதவத்தின் மிக்கோனாய் வந்தடியார் மும்மலமாங்
கோதகற்றி னன்கிருபை கொண்டு

கொண்டகுரு நாராயணப்பிரமன், கூற்றுவனைத்
தண்டஞ்செய் தோனருளிற் சார்ந்ததனை-விண்டனனி
ராமராச நாமகவி ராசனனி கீதமதாய்
நாமகளும் போற்றிடவே நன்று.

அரியலூர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்

## திரு. க. முருகேச முதலியார்

அளித்தது.

கற்றவர்போற் றும்வளஞ்சூழ் காட்டுப்புத் தூர்சிறக்க
உற்றதவத் தோனு யுமையருளால்-முற்றுணர்ந்த
நாரா யணப்பிரம ஞானிதான் வந்தடைந்தா
னூராயுஞ் செம்பொருளி லாழ்ந்து

அத்தவத் தோன்றன் அடிக்கமலம் பற்றியே
நித்தமும் நாற்படியில் நின்றேத்தும்-சித்தசுத்தி
அம்மை அமிர்தத்தா யன்னவன்தன் சீர்சரிதம்
நம்மையுற வுள்நினைந்தார் நன்கு

அம்மையின் வேண்டுதலுக் கானந்த மாயிணங்கி
இம்மையில் யாவரும் இன்புறவே-செம்மையுற
செய்தான் பிரமேந் திரகீதம் செந்தமிழால்
பெய்தே இராமராசன் பெற்று.

## திரு. கீ. இராமலிங்கம் M. A. அவர்கள்

அளித்தது.

திருவேங்கடத்தின் பாங்கருள்ள சித்தூர் என்னும் பேரூரைச் சார்ந்ததான வேட்கூர் என்ற நல்லூரிலே வேங்கடாசல ரெட்டியார் அவர்களது அருந்தவப் புதல்வராக நாராயணன் என்ற திருநாமத்தோடு தோன்றி, இல்லறவாழ்வில் ஈடுபட்டிருந்து, அருள் சக்தியின் கட்டளையினால் தமது அறுபதாவது ஆண்டில் துறவு பூண்டு, அம்மையின் அருளாலேயே

நாராயண பிரமேந்திரர் என்ற அருட்பெயரும் பெற்று, திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த காட்டுப்புத்தூரையுற்று, ஜீவன் முத்த நிலையடைந்து, ஐயாசாமிப்பிள்ளையவர்களது அருமை மகளாராம் பெருந்தவத்திருவினர் அமிர்தத்தம்மையார் என்ற பக்குவப்பட்ட ஆன்மாவுக்கு அருள்நெறி காட்டுவித்து, தமது 120ம் வயதிலே இரண்டற்ற பேரின்பப்பேற்றை யெய்திய, மாபெருந்தகையாரது வரலாறு பொன் எழுத்துக்களாக பொறிக்கப்பெற வேண்டியதே யாகும். அந்த அருள் வரலாற்றினை அப்பெருமானரது வயது 120 ஆனது போல 120 தேனெழுக்குப் போன்ற இனிய தமிழ்ப் பாக்களாலே வ ர கூ ர் உயர்திரு. வித்துவான் இராமராஜு ரெட்டியார் அவர்கள் இயற்றித் தந்திருப்பது பெரிதும் போற்றத் தக்கது. இதை ஆக்கியதனுலே அவர்களது புலமை அருட் புலமையாய் அனைத்துலகும் பாராட்டும் சிறப்புடையதாகிறது.

இது நாள்தோறும் ஓதுதற்குரிய வகையாகச் சுவையும் திருவருளும் கலந்து விளங்கும் நூலாதலின், அருள்பேற்ருேடு நல்வினையுடையவர்கள் உருக்க உள்ளத்துடன் ஓதிப் பயன் பெறுவார்களாக.



# அம்மையார் கூறிய ஆசி மொழிகள்.

## நூலாசிரியனுக்கு

திருநா ராயணி திருவருள் பெற்ற வெம்
குரு நாராயணக் கோமான் புனித
வரலா றதனை வண்டமிழ்ப் பாவால்
இனிதுற நன்ருய் இயற்றி யெமக்கே
அன்புடன் உரிமை யாக்கிய புலவன்
வளஞ்சேர் வரகூர் வண்டமிழ் அறிஞனும்
தகவுசால் கிருஷ்ணசாமி வேள் புதல்வன்
இராமராசன் எனுந்திரு வாளன்
விரும்பும் வரமெலாம் மிகமிகப் பெற்று
வாழ்விற் கணியாம் மக்கட் பேறும்
திண்ணிய யாக்கையும் திரள்பெருஞ் செல்வமும்
நீடிய ஆயுளும் நிறைய வாய்ந்து
வாழ்வாங்கு வாழ வாழ்த்துதும்
எம்முளம் பிரியா இறைபூங் கழலே.

## பொருளுதவி செய்தார்க்கு

இம்பரில் நலஞ்செய் எங்கள் இறைகுரு
சரிதம் இதுதான் தகுநூ லாய்வரப்
பொருளுப காரம் புரிந்த திருமதி
அகிலாம் பாளும், அன்புசேர் செல்வி
சம்பத் குமாரியும் தக்கநல் வளமும்
இன்ப நிறைவும் எய்தி நாளும்
நலமாய் இனிதாய் நன்கு வாழ்கவே.

காட்டுப்புத்தூர்,
மடாலயம்.

இங்ஙனம்,
**கா. அமிர்தத்தம்மாள்.**



## ஸ்ரீ நாராயண

# பிரம்மேந்திர சுவாமிகள் சரித்திரம்.

## (சுருக்கம்)

நீர்வளம் நிலவளம் மிக்க வேட்கூர் என்னும் கிராமத்திலே வேங்கடாசல ரெட்டியார் என்றொரு பெரியார் வாழ்ந்து வந்தார். அவர் நற்குண நற்செய்கைகளுக்கு உறைவிடமானவர்; தன்னுயிர்போல மன்னுயிரையும் நேசிப்பவர்; உயிரினும் ஒழுக்கமே தலைசிறந்தது என்று கருதுபவர்; துறவிகளையும், விருந்தினர்களையும் தெய்வமாக மதிப்பவர்; தொன்னூல்களை ஆராய்ந்து கற்று அதன்வழி ஒழுகுபவர்; "அறுசுவை அடிசிலை வறிதினி தருந்தாது ஆடினர்க் கென்றும், பாடினர்க் கென்றும் வாடினர்க் கென்றும் வரையாது" வழங்குபவர்.

அவர்க்கு வாழ்க்கைத் துணைவியாய் அமைந்த அம்மையார் கொழுநனையே தெய்வமாகக் கருதுபவர்; கற்பினும் பொற்பினும் தலைசிறந்தவர்; தலைவன் குறிப்பறிந்து நடக்கும் பெற்றிவாய்ந்தவர்; மலர் முகத்தாலும், இன்சொல்லாலும், பேரன்பாலும், நாயகனின் மனங் கவர்ந்தவர்; கொண்ட கணவனுக்கு ஏறுபோற் பீடுநடையை நல்கியவர்; கருத்துக்கிசைந்த மனைவியைப் பெற்றமையால் ரெட்டியாரின் இல்லறம் நல்லறமாகப் பொலிந்தது. வாழ்விலே துன்பமென்பது இன்னதென அறியாமல் ரெட்டியார் இன்பமாக வாழ்ந்து வந்தார்.

ரெட்டியார் வைணவ நெறியினர். அவர் குலதெய்வம் திருவேங்கடமுடையான். ஆண்டு தோறும் திருப்பதி சென்று "செந்தாமரைத் தடங்கண்களொடும் செங்கனி வாயினொடும்" திகழும் எம்பெருமானையும், அலர்மேன் மங்கையையும் வணங்கி வருவது அவர் இயல்பு.

இங்கனம் ரெட்டியார் வாழ்ந்து வருங்கால் திருவேங்கட முடையான் திருவருளால் ரெட்டியாருக்கு மூன்று மக்கள் தோன்றினர். அம் மூன்று மக்களும் (மனிதன் பெறவேண்டிய உறுதிப் பொருள்களாகிய) அறம் பொருள் இன்பம் போல விளங்கினர். நல்ல மூன்று மக்களைப் பெற்றமையால் ரெட்டியாரது இல்லறம் என்னும் பொன்மலர் நறுமணம் பெற்றது. ஆண்டுகள் பல கழிந்தன;

இறைவன் திருவருளால் ரெட்டியாரின் வாழ்க்கைத் துணைவி நான்காம் முறை கர்ப்பவதியானார். அம்மையார் கருவுற்றதிலிருந்து யாண்டும் நன்னிமித்தமே தோன்றலாயின; நல்ல கனவுகளை அம்மையார் கண்டனர்; பதின்மதி நிரம்பின.

1791 ஆம் வருடத்திலே (கலியுகம் 4892) அம்மையார் ஓர்ஆண் மகவைப் பெற்றார். நான்காவது பேறாகிய முத்திக்கு நிகரான புதல்வன் தோற்றத்தால் ரெட்டியார் பேரானந்தமுற்று இறைவன் திருவருளை எண்ணி வியந்தார். குழந்தைக்குச் செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் குறைவறச் செய்தார். நாராயணன் என்று திருநாமம் இட்டார்.

குழந்தையும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்தது. துளவிற்கு முளையிலேயே மணமிருப்பது போலக்குழவிக்கு இளமையிலேயே நல்ல குணமும், நல்ல செயலும் அமைந்திருந்தன. குழந்தையின் புன்னகையும், மழலையும் ரெட்டியாருக்குச் சுவர்க்க இன்பத்தைத் தந்தன. பிறைபோல் வளர்ந்த குழவிக்கு ஐயாண்டுப் பிராயம் வந்துற்றது.

"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தியிருப்பச் செயல்" என்ற மூதுரைப் பொருளையுணர்ந்த ரெட்டியார் தம் புதல்வருக்கு வேதியரொருவரால் கல்வி பயிற்றுவித்தனர். புதல்வரும் ஆசிரியனைத் தெய்வமாக மதித்து "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது-பெருந்துயர் அகற்றி அறங்குடியேற்றி உளச்சுருள் விரிக்கும் நலத்தரு கல்வி"யைக் கற்றனர்.

நாராயண ரெட்டியார் பள்ளியில் தம் தாய்மொழியாகிய தெலுங்கையே கற்றார். முற்பிறப்பின் தொடர்ச்சியால் நுண்ணிய அறிவும் தளரா ஊக்கமும் உடையவராய், சில வருடங்களில் "வேமன்ன சதகம்" "போதன்ன பாகவதம்" "அப்பகவீயம்" "அனந்தமுனி சந்தோதர்ப்பணம்" முதலிய நூல்களின் உட் கருத்துக்களை உணர்ந்து, பிறர்க்குப் புகட்டும் தன்மையும் புதிதாகக் கவிதைகள் இயற்றும் ஆற்றலும் வாய்ந்து புலவராக விளங்கினர். இவர் திறமையைக்கண்ட நல்லாசிரியர் இவரை வாயார, மனமாரப் போற்றினர், என்றால் இவர் புலமையை எளியேன் எங்ஙனம் விரித்துரைப்பேன்.

இவர் தன்னொத்த சிறுவர்களுடன் ஆலயங்கட்குச் சென்று இறைவனை வணங்கி "ஆடியாடி அகங்கரைந்து இசைபாடிப் பாடி கண்ணனீர் மல்க நின்று" மனோலயமாகும் பக்தியைக் கைப்பற்றி வந்தனர்.

நாராயண ரெட்டியார் கல்வி பயிலுங்காலத்திலேயே "அடர்த்தெழு குருதியடங்காப் பசுந்துணிப், பிடர்த்தலைப் பீடமேறிய மடக்கொடி, வெற்றிவேற்றடக்கைக்கொற்றவை"யின் பேரருட்கு இலக்கானார். இவர் இளமைக் காலத்திலிருந்தே வைராக்கியத்தோடு விளங்கினார். இவர் மனத்தே பார்வதியின் மறைச் சிலம்பு ஒலித்ததே யன்றிப் பாவையரின் காற்சிலம்பு ஒலிக்கவில்லை. "துள்ளுமதவேள் கைக்கணைக்கு" இவர் என்றும் இலக்கானதில்லை. இதனால் இவர் மேனியில் காமசுரத்திற்குப் பதிலாகத் தவச்சுரமே மிக்குப் பொலிந்தது.

நாராயண ரெட்டியார் மணப்பருவம் எய்தினர். தாய், தந்தையர் புதல்வருக்கு மணஞ்செய்விக்க விரும்பினர். நம் ஞானதேசிகர் அவர் கருத்திற்கு இணங்காராய் "நீலமேனி வாலிழை"யின்பால் பேரன்புடையவராய் வாழ்ந்துவந்தார்.

இவரது திருமேனியில் தவச்சுரம் இருந்தமை கண்ட சிலர் இவர்க்கு மணம் செய்யாதிருத்தலே நன்றென்று பகர்ந்தனர். ஆனால் கிளைஞர்கள் அவரைச்சும்மா விட்டுவிட விரும்பாமல் நம் சுவாமிகளைக்காணும்போதெல்லாம் தாங்கள் அவசியம் மணம் செய்து கொள்ளவேண்டும் என்று வற்புறுத்திக் கூறி வந்தனர். இறுதியில் உறவினரின் வேண்டுகோளை நம் குரவர் ஏற்றுக்கொண்டார்.

இவருடைய உறவினர்களில் ஒருவர் தன் மனைவியின் தங்கையை இவர்க்கு விவாகம் செய்விக்கத் துணிந்து இருதிறத்தாரையும் இணங்கச் செய்து நன்னாளில் நாராயண ரெட்டியார்க்கு இலக்குமி அம்மாளைத் திருமணம் செய்வித்தனர். ரெட்டியாரின் வாழ்க்கைத் துணைவியாயமைந்த இலக்குமியம்மாள் தம் பெயருக்கேற்பக் கணவர்க்குச் செய்யவேண்டிய கடமைகளை வழுவின்றிச் செய்தும் மாமன் மாமி முதலானவர்களிடம் மிக்க அன்பு பாராட்டியும் இல்லறத்தை நல்லறமாக்கினர். மருங்கிலா நங்கையும் வசையிலேயனும் விருந்து கொள்மலரும் புரிந்துரை மணமும், செந்தமிழ்ப் பாடலும், தேக்கிய பொருளும் பாலும் சுவையும் போல ஒன்றி வாழுங்காலத்தே அவர்க்கு ஒரு ஆண் மகவும் பெண் மகவும் பிறந்தன. ரெட்டியார் தம் மக்கள் இருவர்க்கும் கல்வி பயிற்றுவித்துத் தக்க பருவத்தே திருமணம் செய்வித்தனர்.

இங்கனம் ரெட்டியார் வாழுங்காலத்தே "மனிதரும் தேவரும் மாயாமுனிவரும் வந்து சென்னி குனிதரும் சேவடிக் கோமளமாகிய" இராஜராஜேசுவரி அன்பனைத்தடுத்தாட்கொள்ள எண்ணி அன்பனது கனவில் தோன்றினள். "பவளக்கொடியில்

பழுத்த செவ்வாயும், பனிமுறுவல் தவளத்திருநகையும், சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும், பென்னம்பெரிய முலையும், முத்தாரமும், பிச்சிமொய்த்த கன்னங்கரிய குழலும் கண்மூன்றுமாகக்" காட்சி தந்த தேவியின் பேரருளை மிகவும் வியந்து இன்னது பேசுவதென அறியாது திகைத்திருந்தனர் நம் குரவர். அப்போது தேவி, அன்பனை நோக்கி "மகனே உனது ஆறும் வயதில் கார்த்திகைத் தீபத் திருவிழாவில் சுடர்ச் சுற்றி விளையாடித்தனிமையாய் ஆற்று மணலில் நம்மைத் திருவுருவமைத்து வழிபட யாம் எம்முடைய காட்சி தந்து இனி உனக்குப் பிறப்பில்லை எனப் பகர்ந்ததை உள்ளத்தில் வையாது மறந்தனையோ' 'பிறவித்துயரற ஞானத்துள் நின்று துறவிச்சுடர் விளக்கம் தலைப்பெய்த இல்வாழ்க்கை விட்டகலுதி" என்று கூறி மறைந்தனள்.

நம் குரவர் உடனே துயிலகன்று தாம் கண்ட காட்சியை யும் பராசக்தியின் பேரருளின் மாட்சியையும் தமது ஆறும் வயதில் நிகழ்ந்ததையும் நினைந்து, மனங்கசிந்தாலும், துறவறத்தை மேற்கொள்ளாமல் - "தமது இல்லத்தில் உற்றார் மற்றார் அநேகர் உண்டுடுத்தி இன்புற்றிருக்கத் தாம் மாத்திரம் மானம் விட்டு ஒரு கவள அன்னத்திற்குப் பிறரிடம் யாசிக்கவேண்டுமே" யென்று கலங்கி இன்னது செய்வதென்று தெரியாமல் வாழ்ந்து வந்தார்.

நம் முனிவர் துறவு மேற்கொளாமல் மானத்தையே பெரிதாகக் கருதியிருப்பதை அறிந்த பராசக்தி மீளவும் அன்பன் கனவில் தோன்றி "மகனே! கேள். பயனற்ற மானத்தையே பெரிதாகக் கருதிச் சீரிய துறவறத்தைப் பழித்தாய். அத்துறவின் பெருமையை நீ உணராயோ, துறவை மேற்கொள். மாய வாழ்வைப் பெரிதாகக் கருதாதே. இவ்வாழ்வில் இன்பம் எள்ளளவுமில்லை. நாம் உணவு கொடுப்போம்; அஞ்சற்க" எனப் பகர்ந்து மறைந்தனள்.

இதற்குப்பின்னும் நம்முனிவர் இல்லம் துறக்க விருப்பின்றி "தாயே! உமது அடித்தொண்டு புரிவதில் எக்குறை நிகழினும் பொறுத்தருள்க. உமது பிறையும் கொன்றையும் மணக்கும் பாதபங்கஜ நிழலில் அமர்ந்த என்னை இவ்வில்லறத்திலேயே வைத்துக்கடாட்சிக்க வேண்டுகிறேன். உமக்குத் தொண்டு பூண்டொழுகும் எளியேனைத் தாயற்ற குழவியென்னத்தியங்கி அலையக் கைவிடாதே" என்று பிரார்த்தித்துப் பழையபடியே வாழ்ந்து வந்தனர்.

அன்பிற்கு எளியளாம் புராந்தகி மூன்றும் முறை நம் குரவர் பெருமான் கனவில் தோன்றி, "ஒருமை நிலை வாழ் உத்தமனே! நீ முதலில் பிராமணக் குலத்திலும், பிறகு புலையர் குலத்திலும், அதன் பிறகு ஒட்டர் குலத்திலும், தோன்றினை. இப்போது பண்ட குலத்திலே தோன்றி நாராயண ரெட்டி என்னும் பெயர் தரித்து விளங்குகிறாய். உன் பிறப்பு சீருறவும் நித்தியப் பேறு பெறவும், துறவறம் ஏற்றதாதலால் அதை அடை தி" என்று கூறி மறைந்தனள்.

மூன்றுமுறை புவனேசுவரி வற்புறுத்திக் கூறியும், நம் பெருமான் துறவறம் மேற்கொள்ளாமல் முன்போலவே பிரார்த்தனை செய்துவிட்டுக் கவலையின்றிக் காலங்கழித்தனர். அம்மையாரோ மறுபடியும் நான்காம் முறை நம் குரவர் பெருமான் கனவில் தோன்றி "மைந்த! நின் குழப்பத்தை அறவே ஒழித்தி, எமது தரிசனபலன் உனக்குத்துன்பமகற்றி இன்பம் பயக்கும் எனது மகாமாயையின் வல்லபத்தை உணர்ந்தார் ஒரு சிலரே யாவர். பிறவிக்கே காரணமாயுள்ள இன்ப துன்பமாம் அலைகள் வீசும் சாகரமான இவ்வாழ்க்கையிலிருந்துகொண்டுபிறவிக்கடலை நீந்துவது அருமை. என் மொழியின் உண்மையறிய விரும்புவை யேல் ஒரு முழத்துண்டில் காற்பணத்தை முடிந்து முழக்குழி பறித்து முடிப்பையிட்டு மூடி ஒருவாரம் கடந்த பின்னர் நீ சேமித்து வைத்த இடத்தில் அது நிலைத்துள்ளதா என்பதைக்

கண்டறிதி" என்றியம்பி மறைந்தனள். அவ்வாறே நம் குரவர் பெருமான் இருமுறை பணமுடிப்பைப் புதைத்துவைத்து ஒரு வாரம் கடந்த பின் முடிப்பைப் புதைத்து வைத்த இடத்திலே பார்க்க அம் முடிப்பு காணப்படவில்லை. கண்டார் நம் குரவர் துணுக்குற்று இதன் உண்மை இன்னதென உணராது வருந்துங்கையில் தேவி கனவில் தோன்றி "காசைத் தொட்டாற் கருமம், கடத்திலிருந்தாற் கருமம், பிறந்திருந்தாற் கருமம், பிலத்துளே ஓங்காரமாய்விட்டால் பிறிதொருகருமம்உனக்கில்லை" எனக் கூறி மறைந்தனர்.

இந்நிகழ்ச்சியிலிருந்து நம் பரமாசாரியரின் மனம்பெரிதும் மாறுபாடுற்றது. இக்காலத்தில் தான் குடும்பவாழ்வில் பலவித அல்லல்கள் புகுந்தன. சுற்றத்தினரிற் சிலரும் காரியஸ்தரிற் சிலரும் வேலைக்காரரிற் சிலரும் (சுமார் 30 பேர்) விண்ணுலகுற்றனர். அடுக்கடுக்காம் துன்பங்கள் அலையலையாய் வந்தன. நம் குரவர் இவற்றையெல்லாம் சிந்தித்து இதற்குக் காரணம் பரமேசுவரியின் கட்டளைக்குத் தான் இணங்காமையே என்பதறிந்து வேதநாயகியின் கட்டளையை ஏற்றுக்கொள்ளும் பக்குவ நிலையிலிருந்தனர்.

இம்மறைவலை ஆடல் கண்டருளிய அணங்கு ஐந்தாம் முறை அன்பனர் கனவில் தோன்றி "ஒட்டனாய்ப் பிறந்தபோது கல் சுமக்கவில்லையா? நாட்டுக்குள் தோட்டியாய்ப் பிறந்தபோது மாட்டைக்கட்டிச் சுமக்கவில்லையா? மார்நோவத் திருவோடு சுமந்தால் தேகம் இளைத்துவிடுமோ?" எனத் திருவாய் மலர்ந்தனள்.

இனி நாம் நம் அன்னையாம் பார்ப்பதியாரின் ஆணையை மீறி இல்லத்திருப்பது நன்றன்றெனத் தேர்ந்து "தாயே! நின் பொன்னடி நிழல் விட்டுப் பின்னடி வையேன் அடைக்கலம்," என்று கடல்மடை திறந்தன்ன ஆனந்த வாரி பெருக உள்ளம்

உருகிப் புளகிதமுற்று ஆனந்த பராதீனராய் எழுந்து எங்கணும் தங்காராய்ச் சித்தூர் வந்து சேர்ந்தனர்.

நம் குரவரது சுற்றத்தினர் பல இடங்களிலும் இவரைத் தேடிக்காணாமையால் கடைசில் சித்தூரில் வசிக்கின்றாரெனத் தெரிந்து, சித்தூர்க்கு வந்து இவரைக்கண்டு வணங்கி "தேவரீர்! இங்கனம் செய்தது முறையா? யாங்கள் என்ன தீங்கு செய்தோம்? எமக்கு இனி யார் நல்லறத்தைப் போதிப்பவர்? தங்கள் இஷ்டம்போல் மனையிலிருக்க யாம் தமது ஏவலை எதிர் நோக்கிப் புரியும் கடமைப் பாட்டால் புனிதராவோமே. அதை யாங்கள் இழக்காவண்ணம் அருளவேண்டும். தாங்கள் அடியேங்களுடன் எழுந்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தனர்.

குரவர் இம்மொழிக்குச் சேவிகொடாமல் அவர் தமை நோக்கி "அன்பர்களே! வருந்தவேண்டாம். எனக்கு யாதொரு குறைவுமில்லை. எல்லாவற்றையும் விட்டுவிட்டேன். தேவியின் ஆணையை மேற்கொண்டுள்ளேன். இனி யான் சேற்றில் விழுவேன் எனக் கருதாதீர்கள். என்னை, யாராலும் திருப்ப முடியாது. என் துறவறத்தை அழிப்பது அறமல்ல," என்று கூறிச் சுற்றத்தவரை ஊர்க்கு அனுப்பிவிட்டு யோக வாழ்க்கையில் புகுந்தார். சித்தூரில் ஒரு கோவைசியர் நம் குரவரை விசுவாசித்துப் பிரதிதினம் ஒரு கைப்பிடி கடலைப்பருப்பும் அருந்த மோரும் தந்து அன்புடன் ஆதரித்தார்.

நம் பரமாசாரியர்க்கு வேட்கூரில் அரும்பிய ஞானயோகம், சித்தூரில் மலர்ச்சி பெற்றது.

நம் குரவர் சோலையிலும் நதியிலும் மணல் மேட்டிலும் பத்மாசனத்தே இருந்து இயற்கை அன்னையை ஏகாந்தத்திலே கண்டறிந்து இரண்டறக்கலந்து செயற்கையெலாம் ஒடுங்கி மனங்குவிந்து மாசற்ற தவம் புரிந்தனர். தேவியின்பால் பேரன்பு

கொண்ட நம் அடிகள் யோகத்தால் ஆதார பீடங்கள்தோறும் தேவியைக்கண்டு தெரிசித்துப் பிரம்மரந்தரத்தில் சகஸ்ரார கமலத்தில் சோதி வெள்ளத்தே ஒளிரும் கோமள நாயகியின் திருவருளில் மூழ்கி இன்புற்று வாழ்ந்து வந்தார். பல நாட்கள் கடந்த பின் தேவியின் அருளால் பிடிமணலும் நன்னீருமே அருந்தும் வழக்கத்தை மேற்கொண்டார். இவ்வண்ணமாக நம் அடிகள் சித்தூரில் மூன்ருண்டு வசித்து வந்தார்.

இவர் மகிமையை அறிந்த ஊர்மக்கள் கூட்டங்கூட்டமாக வந்து வணங்கி இவரைப் பெருமைப் படுத்தினர். சிலர் சில சமயங்களில் தம் குறையை நிவர்த்திக்கவேண்டும் என்றும் வரந்தர வேண்டும் என்றும் வற்புறுத்தத் தொடங்கினர். சுவாமி கள் தம்மிடம் தவமேது, மகிமையேது யாதொன்றும் இல்லை என்று கூறியும் அன்பர்கள் தம் எண்ணத்தைக் கைவிடாது இவரைச் சதா சூழ்ந்துகொண்டே இருந்தனர். இவர்களால் தம் தவத்திற்கே இடையூறு உண்டாகும் என்பதை உணர்ந்த நம் அடிகள் சித்தூரை விட்டே அகல்வது நன்றென்று கருதி வேங்கட மலைக்கேகிக் குகை வாசம் புரிவது எனத்தீர்மானித்துத் திருவேங்கடத்தப்பன் மீது தெலுங்கு மொழியில் நூறு பத்யங்கள் (விருத்தம்) பாடினர்.

சுவாமிகள் எண்ணத்திற்கு எதிராகத் திருப்பதி செல்ல வேண்டாமென்று உத்திரவாக எங்கணும் தங்காராய், தென்திசை நோக்கி நடந்து சென்று மூன்ரும் நாள் ஒரு சிற்றூரின் வழியில் தங்கினர். அப்போது அவ்வழியே சென்ற ஒரு சன்னியாசி இவரைச் சந்தித்து வணங்கினர். இவர் அவரது அன்பை ஏற்று மகிழ்ந்து சிறிது நேரம் உரையாடினர், பின்னர் 'தென்னுட்டில் நம்போல்வர்க்குத் தவம் புரிவதற்கு ஏற்ற இடம் எது என்று அவரை உசாவினர், அவர் தென்னுட்டிலுள்ள பழனி மலையே சிறந்தது என்று சொல்லக்கேட்ட நம் அடிகள் பழநி மலைக்கே

போவதுநன்றெனத் தீர்மானித்தார். நம் அடிகளது பேரழகு முகப்பொலிவும் அச்சந்நியாசியின் மனத்தைக் கவர்ந்தன. ஆதலால் அவரோடு பேசுவதைப் பெரும்பேறாகக் கருதினார்.

நம் அடிகளும் சந்நியாசியும் மனங்கலந்து இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்போது பசி நேரம் குறுக்கிட்டது. உடனே அச்சந்நியாசி நம் அடிகளோடு தாம் கொணர்ந்த உணவை உண்ண எண்ணி "பிரம்மேந்திரரே! அன்பு கூர்ந்து உணவு உண்ண வாரும்" என்று அழைத்தார். பிரம்மேந்திரரோ ஆகாரம் வேண்டாம் என மறுத்தார். இது கேட்ட சந்நியாசி பெரு வியப்புற்று அதன் காரணத்தை வினவலாயினார்.

சந்நியாசி:— சுவாமிகளே! ஏன் ஆகாரம் வேண்டாம்?

பிரம்மேந்திரர்:—சிலவருஷங்களாக அன்னம் அருந்துவதில்லை. மீறிப் பசி உண்டானால் பிடிமண்ணும் தண்ணீருமே உட்கொள்வேன்?

சந் :— தங்கள் குரு யாரோ?

பிரம் :— பார்க்கச் சொல்வது பரவெளி, ரமிக்கச் செய்வது உள்வெளி, உண்டுபண்ணுவது மனவெளி. கண்டறிந்தால் ஜோதிவெளி, தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு.

சந் :— பிரம்மேந்திரரே! வேதாந்த விசாரணை மேலீட்டால் ஆகாரத்தி இச்சையுந் தவிர்ந்ததாகத் தெரிகிறது.

பிரம் :— வேதாந்தம் வெளியாச்சு. சித்தாந்தம் சோறாச்சு கண்டறியாதவர்களுக்கெல்லாம் கருமமே பேதகமாச்சு.

பிரம்மேந்திரரின் சொற்களில் சந்நியாசி பெரிதும் ஈடுபட்டு மிகவியந்து இவரன்றோ துறவி இவர்க்கிணையாக யார் இருக்கிறார்? மணிபோன்ற செஞ்சொல்லைக் கனிந்து கூறினார். யான் என் சிந்தையைப் பறிகொடுத்தேன். தெலுங்கு மொழியில் இவ்விஷயங்கள் கூறப்பட்டுள்ளதோ நாமும் தெலுங்கு பயின்றால் நமக்கும் இவ்வறிவு வாய்க்குமோ என்றுன்ன, பிரம்மேந்திரர்.

"படித்தால் பல்தெரியும், பார்த்தால் பிரமம்தெரியும்
படித்தால் சோறுண்டு பாபம் செய்யாதே
பிறக்கிறது பாபம் இறக்கிறது புண்ணியம்
இருக்கிறது கருமம்
பிறப்பும் இறப்பும் நீங்கி இருக்கிறது உத்தமம்
தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு" என்றனர்

சந் : - பிரம்மேந்திரரே! தங்கள் சமயம் யாது? வைணவமோ சைவமோ? திருநீறோ, திருமண்ணோ தங்கள் நெற்றியில் பொலியவில்லை, தாங்கள் கரும காண்டத்தை அனுசரிப்பதாகவும் புலப்படவில்லை.

பிர : "நாமமிருப்பது ஊருக்குள்ளே - நாத
நாமமிருப்பது நமக்குள்ளே
வெள்ளியிலிருப்பது ஊருக்குள்ளே - சுத்த
வெளியிருப்பது நமக்குள்ளே
முத்தியிருப்பது ஊருக்குள்ளே - வரு
மூச்சிருப்பது நமக்குள்ளே
கங்கையிருப்பது ஊருக்குள்ளே - ஜீவ
லிங்கமிருப்பது நமக்குள்ளே
மாணிக்கமிருப்பது ஊருக்குள்ளே - நல்ல
மணக்கண்ணிருப்பது நமக்குள்ளே

பஞ்சவர்ணமிருப்பது ஊருக்குள்ளே
பஞ்சபூதமிருப்பது நமக்குள்ளே
அரிசியிருப்பது ஊருக்குள்ளே—பர
மானந்தமிருப்பது நமக்குள்ளே
இதைத் தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு

இம்மொழிகளைக் கேட்ட சந்நியாசி மெய்மறந்து அச்ச முற்று பிரம்மேந்திரரின் திருவடிகளை வணங்கிப் பணிந்து மடமை குடிகொண்ட யான் அறியாமல் புரிந்த குற்றங்கள் இருப்பின் மன்னித்து ஆதரிக்கவேண்டுகிறேன் என்றார்.

பிரம்மேந்திரர் சந்நியாசியின் அன்பிற்குகந்து அவரை உணவுண்ணும்படி செய்து பின் இருவருமாக அவ்வெல்லை யினின்றும் பிரயாணமாகித் திருச்சிராப்பள்ளி அடைந்தனர்.

திருச்சிராப்பள்ளியினின்றும் கருவூர் மார்க்கமாகப் பழ நிக்குச் செல்வதெனத் தீர்மானித்து இருவரும் பல ஊர்களையும் கடந்து கட்டளை என்றதோர் சிற்றூரில் தங்கியிருந்தனர். இவ்விடத்தே காட்டுப்புத்தூரினின்றும் திரும்பி வருகிற இரண்டு சாதுக்களிடம் நம் அன்பர்கள் இருவரும் உரையாடி அவர்களால் காட்டுப்புத்தூரில் ரெட்டியார் மரபிற் பிறந்த ஒருவர் ஏழைகளை ஆதரித்து உண்டியும் உடையும் அரை ரூபாயும் கொடுப்பதாக் கேள்விப்பட்டனர்.

சந்நியாசி தற்சமயம் குளிருக்கோர் ஆடையும் வழிச் செலவிற்கு அரை ரூபாயும் கிடைக்கும் ஆதலின் அதைப் பெற்றுக் கொண்டு பழநிக்கேகலாம் என்று இப்பெரியாருடன் காட்டுப் புத்தூர் அடைந்தனர். சந்நியாசி பிரம்மேந்திரரைக் காட்டுப் புத்தூரின் கீழ்த்திசையிலிருந்த சாவடியில் அமர்த்திவிட்டுத் தான்

விரும்பி வந்த வினை முடிக்க ஊர்க்குட் சென்றனர். அப்போது நம் பிரம்மேந்திரர் தனித்து இருந்தனர். இத்தருணம் நம் பிரம் மேந்திரரின் அருட்பார்வைக்கு இலக்கான பாடசாலைச் சஞ்சீவி உபாத்தியாயர், செவ்வந்திலிங்கம் பிள்ளை, சந்திரசேகரம் பிள்ளை என்ற மூவரும் நம் அருட் குரவருடன் சற்றே உரையாடி அதிலிருந்தே இவர் பெரிய மகாத்மா என்றுணர்ந்து, "சுவாமிகளே! தாங்கள் இங்கேயே தங்க வேண்டும். வேறு எங்கும் போக வேண்டாம்" என்று பன்முறை வற்புறுத்தி நம் பரமாசாரியரின் உடன்பாட்டைப் பெற்றனர்

இம்மூவருக்கும் காட்டுப்புத்தூர் என்றும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளது. இம்மூவரும் அன்று சுவாமிகளைச் சந்தித்து வற்புறுத்தாமற்போனால் காட்டுப்புத்தூர் மற்றைய ஊர்களோடு ஒரு ஊராக விளங்குமேயன்றிப் பெரிய ஞானச் செல்வத்தையும் ஓர் அருட்பெரியாரையும் பெற்றிராது. ஆதலால் காட்டுப்புத்தூரின் சரித்திரத்திலே இப்பெரியார்களின் பெயர்கள் பொன்னெழுத்தால் பொறிக்கத்தக்கன.

சுவாமிகள் காட்டுப்புத்தூர் மக்களின் பேரன்பு கண்டு மகிழ்ந்து பழநி செல்லும் நினைவையே விட்டுவிட்டார். உடன் வந்த சன்னியாசியும் சில மாதங்கள் காட்டுப்புத்தூரில் தங்கி இருந்து பின்னர் தாம் மாத்திரம் "பாயிர நான்மறை பன்பொடு பரவத் தண்டெ ஈன்றேந்தித் தகவுறு கோலம் காட்டி எம்பிரான் களிக்கும் பழநி மலைக்குப் பிரயாணமாயினார்."

காட்டுப்புத்தூர் மக்கள் நம் அருட் குரவரின் தளர்ந்த மேனியில் தளராத் தவக்கனல் மிளிர்ந்து பொலியும் விளக்கங் கண்டு அவர்பால் ஈடுபட்டு அவர்க்கொரு சிறு குடிலமைத்துத் தந்தனர். சுவாமிகள்

"திருவடி தீண்டப்பெற்ற இச்சிறுகுடில்
அருமறைச் சிகரமோ? ஆலநன்னீழலோ?
குருகுல விஜயன் கொடித்தேர்ப்பீடமோ."

பிரம்மேந்திரர் ஆதிநாளிலிருந்து அமையப்பெற்ற சாதனையால் காவிரி நதிக்குத் தனியாகப்போய்ப் பிடிமணலும் நறும்புனலும் உண்டு வாழ்ந்து வந்தனர். யாரிடமும் எதையும் நம் குரவர் பெருமான் யாசித்ததில்லை.

சுவாமிகள் சமாதி கூடும் வேளை தவிர மற்றைய காலங்களில் துறவியைப் போல் நடவாமல் ஓர் குடும்பத்தினரைப் போலவே எளியராக நடித்து வருவார். இவரை யாதானும் ஒருவர் அடைந்து தம் குறைகளைச் சொன்னல் ஆறுதலும் தேறுதலும் கூறிச் சமாதானப்படுத்துவார். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தெலுங்கு பத்யம் (வேமன்ன சதகம் போன்ற) சொல்லி அதன் சாராம்சங்களை எளிய நடையில் விளக்கி மக்கட்கு நல்லறிவு கொளுத்துவார். இவரது சொல்லை அவ்வூரினர் வேதமாக மதித்தனர். இவர் வெளியேறுங் காலங்களில் கருப்புக் கம்பளிப் போர்வையை அணிந்தும் இதர வேளைகளில் கௌபீனதாரியாகவும் இருப்பர். நிற்க.

அப்பாதுரைப் பிள்ளை என்பவர் தம் மனைவியர் இருவருக்கும் புத்திரப் பேறின்மையால் வருந்தித் தினந்தோறும் பழநியங் குன்றமர் குறிஞ்சிக் குமரனையும் பரமேந்திரராம் பிரமேந்திரரையும் போற்றிப் பிரார்த்தித்து வருவாராயினர், அப்பிரார்த்தனை வீணாகவில்லை. சிலகாலங்களுக்குப்பின் அவரது மனைவி ஓராண் மகவு பெற்றனர். இதனல் மகிழ்ச்சி அடைந்த பிள்ளையவர்கள் சுவாமிகளை அடைந்து தன் பிரார்த்தனையையும் புத்திரன் பிறந்ததையும் கூறித் தம் வேண்டுதல் குறைவின்றி நிறைவேறப் பிரமேந்திரரைத் தம்முடன் பழநி மலைக்கு வர இணங்கச்செய்து ஓர் நன்னளில் குடும்ப சகிதம் சுவாமிகளுடன் பழநிமலையைச் சார்ந்து "மறைக் கொழுந்தாம் சிவக்கொழுந்தின் மருங்கினிலே இருகோட்டுப் பிறைக்கொழுந்தை யணிந்தொளிரும் பெய்வளையின் குழற்காட்டில் நறைக்கொழுந்தூடமர்ந்து

சிவஞானவமுதினி தருந்தும் இறைக் கொழுந்தாம்" முருகனைத் தரிசிக்கும் காலத்தே சுவாமிகள் ஆனந்த மேலிட்டால்

பார்த்தால் பழநிமலை பார்வையிட்டால் தங்கமலை
ஆடிவிளையாடிய மர்ந்திருக்கச் சொல்லுமலை
அதிசயம் என்ன சொல்லுவேன்
சுப்பிரமணியனைக் கண்டால் வெகு சந்தோஷம்
கல்லாயிருக்கிறுன்
காட்சி பெற்று தேகத்தை விட்டு விடுவேன்
தேகத்தை விட்டால்
குரங்கு போலிருக்கிறுன், கொண்டு வாகாசென்கிறுன்
பஞ்சாமிர்த அபிஷேகம் பண்ணச் சொல்லி
எகிறிக் குதிக்கிறுன் அவன் முன்னுலே
செய்து வைத்த சிலை சுவாமி என்றும் பேசாது
சாதமிட்டால் சாப்பிடாது
வரங்கொடேன் என்று குந்தியிருக்கும்
ஒன்றும் அறியமாட்டேன்
ஓங்காரம் ஒன்றறிவேன்
தன்னையறிவேன் உன்னை யறிவேன்
பின்னை யொன்றும் அறியமாட்டேன்
பூதேவி சாக்ஷியாய்
தெரிந்துகொண்டவர்தான் குரு எனக்கு

என்று வெளியிட்டு, மீண்டும் காட்டுப்புத்தூர் அடைந்தனர்.

சுவாமிகள் பதினைந்து வருடங்கள் பிடி மணலும், நறும் புனலுமே அருந்திவந்தனர். பின்னர் வேகவைத்த துவரம் பருப்பும் சர்க்கரையும் நெய்யும் சேர்த்து மத்தித்து எலுமிச்சம் பழத்தின் அளவு அருந்திவந்தார். இக்கைங்கரியத்தை நடத்தி வந்தவர் கோட்டை அம்மாள். ஓர் நாள் நம் சுமாமிகள் தேவி அனுக்கிரகித்தவாறு கோட்டையம்மாளால் பதினைந்து

படி அரிசி சமையல் செய்வித்து ஊர் இளைஞர் புடைசூழ இருந்து உண்ணச்செய்து தான் மத்தியில் இருந்து ஒரு சிறு கொட்டாங்கச்சி அன்னம் ஏற்று "கோவலாக்காரன் என்று கூசாமற் கொண்டுவந்து சாதம் கொடுத்த தாயைச் சரணம் பண்ணிக்கொள்வேன். வாய் பிடிக்க வயிறு நிறையக் கண்டத்திற்குள் போகும்படியாய்க் கலந்து ஓர் உருண்டை கொடுத்தார் போதும் கண்டவன் காட்டமாட்டான், கொண்டவன் விடமாட்டான் இவன் மறைகிறவரைக்கும் சோறம்மா என்று இருப்பான் தெரிந்துகொண்டவர்தான் குரு எனக்கு" என்று சொல்லிப் புசித்தனர்.

காட்டுப்புத்தூர் மிட்டாதாரிடம் காரியஸ்தராயிருந்து, இம்மஹானைப் போற்றி வழிபடும் ஐயாசாமிப் பிள்ளை அவர்கள் தன் மனைவி மக்களுடன் அடிக்கடி சுவாமிகளிடம் சென்று தரிசித்து வருவார். இவரது மக்களில் அமிர்தத்தம்மாளுக்குத் தக்க பருவத்தில் விவாகமாகிப் பதினைந்தாவது மாதம் தம் கணவர் விண்ணுலகமடைய, அவ்வம்மை தன் தாய் வீடு வந்து வசிக்கலானூர். திருநெல்வேலியினின்று இக்குடும்பத்தின் பந்துவான (சாதுக்களிடம் அன்பு பூண்ட) நரசிங்கம் பிள்ளை என்பவர் இங்குவர, சுவாமிகளின் பிரபாவத்தைக் கேட்டுத் தரிசித்துத்திரும்புங்காலையில் 17வயதுள்ள அமிர்தத்தம்மாளுக்கு ஆறுதல் கூறி, அம்மணி! இங்கு வசிக்கும் ஞான மூர்த்தியின் சேவையே உனக்குச் சாலச்சிறந்ததென்று கூறிப் போயினார்.

அப்பெரியார் புகன்றவண்ணம் இப்பெண்மணி வாரம் ஒரு முறை சென்று சுவாமிகளைச் சேவித்துவருவர். ஓர் தினம் சுவாமிகள் "அடிக்கடி இவ்விடம் வரவேண்டாம்" என்று கூறினார்.

இதுவும் நம் ஊழ்வினைப்பயனே! இவ்வரிய சேவைக்கும் நாம் உரிமையற்றவளாக நம் கால பேதம் இடையூறாக

நிகழ்ந்ததே எனக் கவலையுடன் குடும்பத்தில் தாய் தந்தைய ரால் ஆதரிக்கப்பட்டுக் காலப்போக்கைத் தவப்பொழுதாகக் கொண்டனர்.

ஒரு தினம் இவ்வம்மையார் தம் உறக்கத்தில் காவி வேடந்தாங்கிய ஒருவர் தோன்றி "சுவாமிகள் வரச்சொன்னர்" என்று நிகழ்த்தியதாகக் கனவு கண்டு, அஃது உண்மையாகு மென்றே நினைத்துச் சுவாமிகளைத் தரிசிக்கச்செல்ல, அப்போது சுவாமிகள்

"அம்மா வந்துவிட்டாயா?
வருவாயோ வரமாட்டாயோ வென்றிருந்தேன்
இன்று முதல்தாயும்பிள்ளையுமாகக் காலம்கழிக்கவேண்டியது
பிறந்தாலிறக்காதே, இறந்தால் பிறக்காதே
இருக்கிறவரையிற் காணுதே
இருக்கப்பட்ட குருவைக் கண்டு
உபதேசம் பெற்றுக்கொள்ள வந்திருக்கிரேம் என்று நினை
நாம் ஒருவருக்குக் குருவென்று
நினைக்க வேண்டாம்" என்று கூறினர்.

இம்மொழியை வேத மொழியாகக் கொண்டு அம்மையார் மிக்க மகிழ்ச்சியடைந்தார். அன்றையிலிருந்து அமிர்தத்தம்மை யாரே சுவாமிகட்கு அரிய தொண்டுகள் செய்து வரலாயினர்.

இவ்வாறு நம் அடிகள் காட்டுப்புத்தூரில் 63 வருடங்கள் வாழ்ந்து வந்தார். இவர் தம் 120-ஆம் வயதிலே சுவாதீனம் அடைய வேண்டுமென்று எண்ணி ஆகாராதிகள் உட்கொள்ளா மல் யோகத்தே இருக்கத் தொடங்கினர். இஃதறிந்த ஊரார் வியந்தனர். சுவாமிகள் நம்மை விட்டுப் பிரிந்துவிடுவாரோ என்று நினைந்து வருந்தினர்.

ஓர் நாள் சுவாமிகள் சமாதியினின்றும் எழுந்து அமிர்தத்தம்மாள் வீட்டுத் திண்ணையில் வந்தமர்ந்தனர். அப்போது அம்மையார் சுவாமிகள் ஆகாராதிகள் உட்கொள்ளாமையைப் பற்றிக் கவலையுற,

" பசியெடுக்காது பார்வை பறக்காது
வாசியுறங்காது யோகியானால்
இளைப்பு கொடுக்காது ஏகாட்சரத்தில்
தெரிந்துகொண்டவர்தான் குரு எனக்கு.
முத்திக்குப் பங்கமில்லை இனியிவன் பேசமாட்டான்
வார்த்தைக்கு வார்த்தையில்லை
வந்துபோக வாகனமில்லை
கொடுத்து வாங்குகிற கடவுளரில்லை
தெரிதுகொண்டவர்தான் குரு எனக்கு.
வார்த்தை பெரிதல்ல வந்து போவது பெரிதல்ல
சோத்துக்கிருப்பது பெரிதல்ல சுணங்கன்போல்
கண்டறிகிறது பெரிது.
கண்டா நாதத்திற்குள் கண்மணியைத்
தெரிந்துகொண்டவர்தான் குரு எனக்கு.
கண்மணியைக்கண்டு காட்சி பெறமாட்டாமல்
பொய்மணி மேலாசைகொண்டு பிறந்திறந்தேன்
ஈஸ்வர சங்கற்பம் என்ன செய்யலாம்
தெரிந்துகொண்டவர்தான் குரு எனக்கு "

என்று நம் அடிகள் புகன்றனர்.

பிறகு நம் பிரம்மேந்திரர் இரண்டு நாள் நிர்விகற்ப சமாதியிலே ஆழ்ந்திருந்தனர். மூன்றும் நாள் (கலியுகம் 5012 விரோதிகிருது வருடம் மாசி மாதம் 28ந் தேதி ஆதி வாரம் கேட்டை நக்ஷத்திரம்) அடியார்கள் புடை சூழ்ந்து நோக்கிக்கொண்டிருக்கும்போது ஊனுடலை உகுத்துச் சோதி

வடிவாய்த் தத்துவம் கடந்த தனிப்பொருளாகிய கந்தழி நடுவண் கலந்தொன்றுயினர்.

மூன்று தினங்கள் பிரம்மேந்திரரின் பிராகிருதத் திரு மேனிக்கு அபிஷேக அலங்காராதிகள் செய்து திரளான அன்பர்கள் குழுமிச் சூழ வீதிவலம் வந்து சமாதி நிலையத்துள் ஆகம முறைப்படி ஐயன் திருமேனியை அடக்கம் செய்தனர்.

பிறகு இவர் சமாதிக்கு 47 நாட்கள் நித்திய பூசையும், மறு தினம் மண்டலாபிஷேகமும், அடுத்த மூன்று நாள் மகோற்சவமும் கொண்டாடி அத்தினங்களில் எளிய அடியவர் களுக்கு அன்னமளித்து ஆடையும் வழங்கப்பட்டது.

நம் பிரம்மேந்திரரின் சமாதி பேரருள் நிலையமாக இன்றும் விளங்கி வருகிறது. பிரம்மேந்திரரின் பேரருள் மாட்சியை அறிந்தார் அனைவரும் அடையவேண்டுவன அடைந்து நலமொடு வாழ எல்லாம் வல்ல கருணாகரன் அருள்க.

பொங் கெழிற் காட்சி யென்னும்
புரையறு நிலையில் சற்றும்
சங்கையில் விராகம் என்னும்
தகவுசால் கதவமிட்டு
மங்கலில் ஒழுக்கமென்னும்
வயிரத்தாழ் கொளுவியுள்ளே
துங்கமார் பிரமங் கண்ட
தொல் பிரமேந்திரன் வாழ்க.

**கலம் தழைக!**



ஓம்

ஸ்ரீராமகிருஷ்ணாயதே நம:

# அரங்கேற்றம்.

---

தலைவர்

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன ஸ்தாபகர்

**ஸ்ரீலஸ்ரீ சித்பவானந்த ஸ்வாமிகள்.**

காலம் — கர-ஆண்டு, மாசி 8

களம் — மடாலயம்

பல்வளம் நிரம்பிய பராய்த்துறைப் பாங்கர்
சிவமணம் கமழத் தவவனம் கண்டதில்
வித்யா லயத்தை விருப்புடன் நிறுவி
சமயமும் கல்வியும் தகவொடு படரக்
கொழுகொம் பெனவொளிர் குரவர்சிகாமணி
வேய்ங்குழல் கார்முகம் விடுத்திவ ணுற்ற
பரமா சார்யராம் பரமஹம் சரையும்
சிங்க வேறெனத் திகழ்நரேந் திரரையும்
மகிழ்வொடு வழிபடு மாசிலாத் தவமணி
ஆகிய—சீரிய முனிவரர் சித்பவானந்தர்
வீறுடு தலைமை மேவரங்கத்தே
ஏறி நடித்தனள் இந்த
மாறிலாக் காவியச் செல்வி மகிழ்ந்தே.

# சமர்ப்பணம்.

---

நலந்தரு தென்றன் மெல்லடி வருட
    நவையறு கரும்புகண் வளரும்
பொலங்கிளர் மருதத் தண்பணை நடுவண்
    பொலிபுகழ்க் காட்டுப்புத் தூரில்
துலங்கருட் புனற்பெய் தறக்கொடி வளர்த்துத்
    துறவெனு நறுமலர் வாங்கி
யிலங்கிறை யடியிற் புனைஅமிர் தத்தாய்க்
    கித்திரு நூலுரித் தாமால்.



# தொண்டர் வாழ்த்து.



முற்றுந் துறந்த முனிவரர் பெருமா
னிணையடி எய்தி யின்னரு ளமுதை
வழங்கியும் அருந்தியும் நிரம்பின் பண்டைந் தேரா
ரருட்குணம் நிரம்ப வமைந்து விளங்கலி
னன்னோ ரமிர்தத் தம்மை; பணிவோ
டியன்ற பணியை விரும்பிச் செய்த
மையறு வேங்கட மாதவக் கொழுந்து
இடையரு தன்போ டிறைவர் பொருள்சே
ராரமு தருந்தி யருள்வடி வெய்தி
மனங்களித் துவக்குங் குழந்தைவேற் சாமியா
ராருடற் பயன்தொண் டாற்றலென் றுணர்ந்து
சுவைத்தொண் டியற்றிய சுவாமி ராமையா

இவர்கள்

மூலம் என்ற முழுவலி யானை
ஓலம் பிறப்ப வுற்றரு ளிறைவன்
அலர்மேன் மங்கையோ டன்பிற் காப்ப
வாழி வாழிபல் லூழி வாழியவே.



ஸ்ரீ:

# பிரம்மேந்திர கீதம்

## பாயிரம்

## காப்பு

### விநாயகர்

அஞ்சக் கரத்தின னடியிணை மலரென்
நெஞ்சத் தடத்தொளி நிரம்பிற் றம்மா.

### பிரமம்

1. வையம் சேவடி மாக்கட லாடைவிண்
செய்ய மேனி திசைகரம் மாமதி
மையில் சோதி மலர்விழி காற்றுயிர்ப்
பையன் தன்மை யறிந்தமை வாமரோ.

### அயன்

2. சீரிய கலையமு துண்டு தேக்கிடு
நேரிய பாவலர் நெஞ்சப் போதமர்
நாரியின் விழிக்கயல் நயக்கும் வேதமா
வாரியில் மூழ்குவாம் வளங்க ளெய்தவே.

## அரி

3. ஆடியில் நோக்கினு மகப்ப டாவனு
நீடிய மேருவி னிமிர நன்கருள்
பீடியை திருவெனும் பெருமின் சேர்முகிற்
கீடிலன் பியற்றுவா மென்றும் வாழவே.

---

## அரன்

4. நற்சுவை யிதுவென நன்கு தேர்ந்துணர்
பொற்புறு முனிவரர் புந்தி மேவிய
அற்புத வுமைக்கொடி யணைந்த தெய்வத
வெற்பினைப் பணிகுவாம் வினைக ளறவே.

---

## முனிவரன் புகழ்

5. சீர ணிந்ததொல் குடியினிற் றோன்றினோன்; றெய்வ
ஆர ணந்தெரிந் தில்லறம் நடாத்தினோன்; அகில
கார ணந்தெளிந் தன்பினில் மூழ்கினோன்; கடவுள்
நார ணன்புகழ் யாவரே நவின்றிட வல்லார்.

6. கற்க வேண்டுவ யாவையும் கசடறக் கற்று
நற்ப யன்தெரி பாவலன்; நலங்கொள்வே மன்னன்
பொற்ப மைந்தமெய்ஞ் ஞானமே புவியில்மா னிடமாய்
உற்ப வித்ததென் றெண்ணிட வுலகினில் வாழ்ந்தோன்.

7. அலங்க லிற்றெரி யரவென வைம்பெரும் பகுப்பா
யிலங்கு மெய்ம்மையிற் கலந்தவன்; இனியநல் லன்பர்
நலம்பொ லிந்திடச் சோதியைக் காட்டினோன்; நல்லோர்
குலம்பொ லிந்திடத் திருவருள் தந்தவன் குளிர்ந்தே.

---

8. மணலுண் டற்புதம் காட்டினேன்; மரபறி யாது
நுணலிற் பேசிய இலக்குமி நொய்தென இட்ட
குணமி குத்தமுப் படியினைக் குறைவற வுண்டு
உணவை ழைத்தவள் பலபடி கடந்திட வுவந்தோன்.

9. தன்ம மீதெனத் தெளிவுற வுணர்ந்தவன்; சார்ந்தோர்
கன்ம மோய்ந்திடப் போக்கினேன்; கரைந்துகு நெஞ்சன்
குன்ம நோயினைத் தகர்த்தவன்; குடிற்கணே யிருந்தும்
கன்ம ழைக்கசை யாதவன்; கனிந்தவின் சொல்லன்.

10. ஊனு லாவுமிவ் வுடலிலே உயரிய தெய்வம்
தானு லாவிடப் பிறங்கினேன்; தவக்கனல் மிக்கோன்;
தேனு லாவுநன் னுவினன்; திகழுறு சமயக்
கானு லாவிமெய்ம் மருந்தினைக் கைவரப் பெற்றோன்.

11. ஆசை யாதிய பற்பல பேயினை யழித்த
ஈசன்; திண்ணையும் படிகடந் தெய்திய வுணவும்
ஆசி லாவொரு கள்வியு மன்றிவே றில்லாத்
தேசன்; காலனின் வன்மையைச் சிதைத்தவல் லாளன்.

12. மெய்ம்மை யிற்படிந் திரண்டறக் கலந்தவன்; வீணே
பொய்ம்மை யார்ந்தவிவ் வாழ்வினிற் புகாதுய ரமுதத்
தம்மையார்க் குயரருள்நெறி உணர்த்தினேன்; அன்னை
செம்மை யேய்பத வடுப்பொலி திப்பிய உளத்தன்.

13. மாசி லாதசெங் கதிரொடு மதியிடை மேய
தேசு சான்றபூ ரணியருட் பெருக்கினிற் றிளைத்தோன்;
பேச ருங்கலைக் கப்புறம் பிறங்குவேங் கடத்தெம்
ஈசன் மேற்கவி நூறுசெய் திறைவடி வானேன்.

14. எங்கு லம்புரி தவத்தினு லிவண்வரு மெம்மான்
பொங்கு சீர்த்தியை யாவரே புகன்றிட வல்லார்;
கங்கை சூடிய கண்ணுத லிடப்புறம் கலந்த
மங்கை யேயவற் களித்தனள் மாசிலாத் துறவே.

## அவை யடக்கம்

15. தக்க ஞானமும் சான்றவ ராசியும் சார்ந்து
பக்கு வம்பெரு தடியனேன் பகர்ந்தநூ லேற்று
மிக்க நல்லருள் வழங்குவன்; மெய்ம்மையிற் றேய்ந்தோன்
எக்க ருண்பிர மேந்திர னைதையிகழ்ந் திடுவான்.

16. பழுத்த செஞ்சொலீர்! புலமையைக் காட்டவோ பாமன்
விழுப்பெ ரும்புகழ் பாடினேன்? மேயநா னெல்லா
மிழுக்கில் மூழ்கிடா தின்னிசைக் காருயி ராகும்
ஒழுக்க மெய்திடப் பாடினே னெதுக்குமின் குறையே.



ஓம்

ஸ்ரீ ராமஜெயம்.

# தோற்றப் படலம்.

1 கங்கையுந் துளவு மன்பர்
சிந்தையும் கலந்த பாத
பங்கயத் தெந்தை மூலப்
பரையொடு பண்பின் மேவு
பொங்கெழில் வேங்க டத்தின்
புறம்பொலி சித்தூர்ப் பாங்கர்
மங்கல வைப்ப தாக
மலர்ந்தது வேட்கூ ரம்மா.

2 சீரிய வமுதம் நல்கும்
செவ்விய வானம்; குன்று
தேரியை வளங்க ணல்கு
மெழிற்புவி; யொழுக்கம் நல்கும்
நேரிய வுள்ளம்; என்றும்
நிறையருள் நல்கும் தெய்வம்;
பேரியை வாழ்வு நல்கும்
பிறங்குநூற் காட்சி; யாங்கே.

3 செவ்விய இளமை தன்னைச்
சீரிய கல்விக் கீந்தும்
எவ்வமில் வாலி பத்தை
யின்புசெய் காதற் கீந்தும்
கவ்வைசேர் மூப்பை யின்பங்
கனிந்தருள் இறைவற் கீந்தும்
இவ்வயி னமர வாழ்வை
யெய்துவர் மக்க ளெல்லாம்.

4 மலரினை மென்மை யென்றார்
மக்கள்மெய் தீண்ட லானே;
இலகிசை வேண்டார் மக்க
ளின்மொழி கேட்ட லானே;
பலர்புகழ் விசும்பு மென்றார்
பயில்விருந் தோம்ப லானே;
உலகினை யிகழா ரன்பை
யுணர்தலான்; மக்க ளெல்லாம்.

5 நெற்றியில் வியர்வை முத்தம்
நிலவிட வுழவு செய்து
பெற்றசெல் வத்தால் வேந்திற்
பெருமித வின்பந் துய்த்து
முற்றறி துறவோர் போல
வாழ்குவர்; முறையி னன்றால்
கற்றவர் வாழ்வி லிங்கண்
காண்பது மருமை யாமோ?

6 ஓங்குநல் வளங்கட் கெல்லா
முறைவிட மாகிச் சற்றும்
தீங்கணு காவேட் கூரிற்
றிகழிரட் டியர்கு லத்தே
யாங்குறத் தோன்றி மேலாம்
பண்பிரிற் குறைவு றாது
வேங்கடா சலப்பேர் வள்ளல்
விளங்கினா னறங்கள் வாழ.

7 பூதமைந் துக்க போதும்
பொலிவினிற் குறையா வான
மீதமர் துளபத் தண்டார்
விமலனுக் கன்பு செய்வோன்;
ஏதமில் விழுப்பம் நல்கி
யெழுமைக்கு மேமம் செய்யும்
தீதுதீ ரொழுக்கம் பூணும்
செவ்விய நலத்தின் மிக்கான்.

8 பற்றறு துறவோர் பாதம்
பயின்றநன் முடியன்; சாலக்
கற்றதொன் னூலிற் றேய்ந்து
கனிந்தநா வினன்;எஞ் ஞான்றும்
நற்றிறம் சான்ற அன்பில்
நனைந்தவுள் ளத்தன்; மக்கட்
குற்றதொண் டியற்ற லேசால்
பெனக்கொளு முறுதி யாளன்.

9 வந்தநல் விருந்தை யோம்பி
வருவிருந் துவந்து பார்க்கும்
நந்திய செல்வன்; விண்ணோர்
நயந்தபே ரமுதென் றாலும்
முந்துறத் தனித்து ணாத
முறையினன்; விருந்தி லூணைச்
சிந்தையில் விடமென் றெண்ணும்
சீரிய அறிவின் மிக்கான்.

10 தெள்ளிய அறிவை மேலும்
சிறப்புற வளர்ப்ப தாய
பள்ளியை நிறுவித் தெய்வம்
பயில்சின கரம்தி ருத்தி
யொள்ளிய அறத்திற் குன்று
துயர்நெறி சென்று சால
வள்ளியோ னாகி வேட்கூர்
மன்னென வாழ்ந்தா னம்மா.

11 கற்புசான் மனைவி யோடு
கனிந்தவில் லறம் நடாத்திப்
பொற்புற வாழும் நாளிற்
புகழ்மிகு வேங்க டத்தான்
அற்புதக் கருணைச் சார்பா
லறம்பொரு ளின்பம் போலும்
முற்படு புதல்வர் மூவர்
பிறந்தனர் முறைவ ழாற்கே.

12 மன்னுமுப் புதல்வர்ப் பேற்றால்
மகிழ்ச்சியிற் குறைவி லாது
நன்னர்வாழ் வுறுங்கால், வேட்கூர்
நலம்பெற, வமுத ளாய
பொன்னிசூழ் காட்டுப் புத்தூர்
புத்தெழில் கொள்ள யானும்
நன்னல மெய்தச், சான்றோர்
நலன்பெறத், தூய நாளில்

13 இவ்வருங் காவி யத்திற்
கெழிற்றலை மகனாய்ச் சற்றும்
வெவ்வினை பயிலாச் சான்றோன்
மேவுநா லாம்பே றெப்ப
அவ்விய மில்லான் தேவி
யகம்புறம் தூய்மை யெய்திச்
செவ்வியிற் பொலியத் தோன்றித்
திகழ்ந்தன னுலக முய்ய

14 முற்றிய தவத்தாற் றம்பான்
முகிழ்த்தநன் மகவைக் கண்டு
பெற்றியிற் சிறந்தோ னின்பப்
பெருங்கடல் படிந்து, தெய்வ
நற்றிறக் கருணை யுன்னி,
நாரண னெனப்பேர் சாற்றிப்
பற்றுற வளர்த்தான் மைந்தன்
பனிப்பிறை போல்வ ளர்ந்தான்

15 சிந்துரப் பவள வாயிற்
றேங்குபுன் னகையி னாலும்,
இந்திர ரமுதம் நாண
இசைத்தநன் மழலை யாலும்,
சுந்தரச் சதங்கை கொஞ்சத்
துளங்கிய நடையி னாலும்,
தந்தைதாய்க் கின்பம் செய்தான்;
தனையுண ரறிஞர் கோமான்

16 சாற்றவ ஞக்கி மைந்தன்
றனையவை முன்ன ருய்த்தல்
ஈன்றவன் கடனென் றேர்ந்த
இனியவன் புதல்வன் தன்னை
யான்றமைந் தொளிசெ யாசாற்
களித்தன னவன்பா லெய்தி
ஊன்றியாந் திரம்ப யின்றான்
உலகுண ரறிஞர் கோமான்

17 முற்றுண ராசான் தன்னை
முறைமையிற் பணிந்தன் னுக்
குற்றுழி யுதவித் தொன்னூ
லுட்பொரு ளாயும் போதே
சொற்றநான் மறையுங் காணுத்
தூயவ னிடப்பான் மேய
பற்றிலா னருளைப் பெற்றான்
பரமுண ரறிஞர் கோமான்

18 நிறைகுணத் தாசான் தன்பால்
நெடுங்கலை முற்றும் ஆய்ந்து
குறைவறப் பயின்றவ் வாசான்
குளிர்ந்தவா சிகளும் பெற்று
நிறையெழிற் குமர ளுக
விளங்கினன்; நீல மேனி
யிறைவியின் னருளு வாய்கொண்
டிடர்க்கடல் கடந்த தூயன்

19 பிறந்துநன் மொழிப யின்ற
பின்னிறை யடிய லாது
மறந்தும்வே றெணுது காமன்
மலர்க்கணை வீறு தீய்த்துச்
சிறந்தனன்; சமய வாதச்
சிறுநெறிப் புறம்போ காம
லறந்தரு நெறியி லெய்தி
யம்மையைக் கண்ட தூயன்

20 தன்னிகர் சிறுவ ரோடு
தவவுயர் கோயி லெய்தி
முன்னவன் றனைவ ணங்கி
முளரியங் கண்ணீர் வார
இன்னிசை பாடிக் கண்டோர்
யாவரு முருகி யன்பு
துன்னிட வாழ்ந்தான்; தேவி
துணையடி மறவாத் தூயன்

21 அரம்பொரு வேற்க ணல்லார்
அழகினில் விளைந்த காமச்
சுரம்படு பருவந் தன்னிற்
றூய்மையின் படிவம் போன்றே [illegible]
வரந்தரு தவச்சு ரத்தால்
வயங்கினன்; வையமீன் று
புரந்தவ ளருளைப் பெற்றோர்
புன்மையிற் றோய்த லுண்டோ

22 கருங்குழன் மடவார் சிந்தை
கலங்குபே ரழக னாகி
யிருந்ததன் புதல்வன் செவ்வி
யின்புற நோக்கித் தந்தை
விரும்பினன் மணமு டிக்க
வேதவே தாந்தம் கண்ட
மருந்தினை நுகர்ந்த தூயன்
மறுத்தன னிசைவி லாதே

23 தெண்ணிலா மலர்ந்த வெண்ணிச்
சிவம்புரி நடத்திற் சேர்ப
வண்ணமார் தாளங் கொட்டு
வயிரவிக் கினியான் மேனி
நண்ணிய தவச்சு ரத்து
நலமுணர் பெரியோ ரிந்தப்
புண்ணியன் மணத்திற் சிக்கப்
புரிவது பொருந்தா தென்றார்.

24 மிக்கவன் மணம்வேண் டாது
விழுமிய தெய்வ நாதன்
செக்கரஞ் சடையிற் சூடச்
சிவம்பெறு கொன்றை யந்தா
ருக்கசெந் தாது போர்த்த
வுயர்பதத் தெம்மோய் தன்னை
நெக்குநெக் குருகிப் போற்றி
நின்மல னாக வாழ்ந்தான்.

25 நன்னிதி யனையா னிங்கன்
நலமுற வாழும் நாளில்
மன்னிய சுற்றம் பின்னும்
மணத்தையே வற்பு றுத்திப்
பன்னிய வுரைகள் கேட்டுப்
பரிவினால் நேர்ந்தா னையன்
துன்னுநல் லன்பை வெல்லும்
சூரரு முளரோ மண்மேல்?

26 நசையிலா னிசைவைப் பெற்ற
நல்லியற் சுற்றத் தார்கள்
வசையிலாக் குலத்துட் டோன்றி
வயங்கெழில் விளக்கம் போல
இசையினாற் றனைவி ளக்கு
மிலக்குமி யெனும்பூங் கொம்பே
அசைவிலா நாரணற் கென்
றமைந்தவ ளெனநி னைந்தார்.

27 மைந்தனுள் ளிசைவு கேட்டு
மகிழ்ந்தனர் பெற்றோர்; சுற்றச்
சிந்தையை யுவந்தஃ தேற்றுத்
திருந்திழை தன்னைப் பெற்றோர்க்
கிந்தநற் செய்தி சொற்றார்;
இணையிலார் மகிழ்ச்சி பொங்க
முந்துற நேர்ந்தார்; நாளும்
முறைமையிற் குறித்தா ரன்றே.

28 பொற்புறு நாளிற் சுற்றம்
புதுக்களி மூழ்கச், சான்றோர்
நற்பயன் கனிந்த வாசி
நவின்றிட, வொப்பி லாதான்
கற்பகப் பூங்கொம் பன்ன
கன்னியை மணந்தான்; மக்க
ளற்புதக் கோலம் நோக்கி
யகங்களி கொண்டார் பெற்றோர்.

29 மெய்யுண ரறிஞர் கோமான்
விளங்கிழை தனைம ணந்து
பொய்யிலின் பெய்துங் காலை
பொலியுமோர் புதல்வி யோடு
மையிலோர் புதல்வற் பெற்று
மங்கல மனையின் பேற்றைக்
கையுறப் பெற்றான்; தேவி
கடைக்கணின் விளைவீ தன்றோ

30 தக்கவன், மனைவி யாங்குத்
தன்னிடை வந்து தித்த
மக்களை வளர்த்து நன்னூல்
வழுவறப் பயிற்றி யன்பால்
மிக்கநன் மணம்பு ரிந்து
வேண்டுவ வனைத்தும் செய்து
பொக்கமில் சுற்ற மேத்தப்
பொலிந்தன னின்ப வாழ்வில்.



ஓம்

திரிபுரசுந்தராயை நம:

# துறவுப் படலம்.

1 கற்பனை கடந்த மெய்ப்பொரு ளியல்பைக்
கண்டவ னில்லறம் நடாத்திப்
பொற்புற வாழ்ந்தான்; அறமெனும் பைங்கூழ்
பொலிவுற வளர்ந்தது; துறவோர்
முற்படு கருணை வழங்கினர்; வறிஞர்
முன்னிய யாவையும் பெற்றார்;
அற்புரு விற்றென் றுணர்ந்தனர் மக்கள்;
அமுதமே விளைந்ததெம் மருங்கும்.

2 தன்னரிய சாந்தம் பூசினும் கனலாற்
றளர்வுறக் காயினும் திரியாப்
புன்னரிய னிங்ஙன் வாழ்ந்திடு நாளிற்
புனைத்துழாய் மௌலியான் றங்கை
தின்னரிய அன்பன் றனைத்தடுத் தாளத்
திருவுளத் தென்னரியப் பெரியோன்
துன்னரிய கனவிற் றோன்றினள்; வேத
நூபுர மொலித்தன வம்மா.

3 பொன்புரை சடையோ னிடமருங் ககலாப்
பூங்கொடி தோன்றலு மறிஞன்
என்பொடு மாங் குளிர்ந்து கண்கணீர் வார
விசைத்தநா வழுதழற் றெடுப்ப
அன்பினி லாழ்கிச் செயன்மறந் திருந்தான்;
அருமறை நாயகி யவனை
இன்புற நோக்கி வாய்மலர்ந் தருளோ
டின்னன புகன்றிட லானாள்.

4 “நற்றவப் புதல்வ! மூவிரு வயதில்
நலந்திகழ் கார்த்திகை விழாவில்
பெற்றியின் மிக்க சிறுவர்கள் சூழப்
பிறங்குசெஞ் சுடரினைச் சுற்றி
முற்றிய பின்ன ரெம்முரு வமைத்து
மூன்றெழு மன்பினாற் பணிய
வுற்றியாம் நினக்குப் பிறப்பிலை யென்ற
வுரையினை மறந்தனை போலும்”

5 “புந்திமிக் குடையோய்! கற்பன கற்றும்
பூரணப் பொருளியல் போர்ந்தும்
நந்திய வுலக மாயையைத் தெரிந்தும்
நலந்தரு துறவுமேற் கொளாது
வெந்துயர்க் கெல்லாம் விளைநில மாக
விளங்குமிவ் வில்லறக் களரில்
அந்தமில் வாழ்க்கை யமுதினைச் சொரிந்த
லறிவினாற் பெரும்பயன் யாதோ”

6 “பழுதிலாப் புதல்வ! இல்லறம் நடாத்தும்
பண்பினை யுலகெலா மறிய
வழுவற எடுத்துக் காட்டினை; பிறவி
மாக்கடற் கொருபுணை யாகும்
விழுமிய புகழ்சால் துறவறம் நடாத்து
விதத்தையும் காட்டுதி” என்றுத்
தொழுதகு மாற்ற மினிமையிற் கிளந்து
துன்னென மறைந்தன ளம்மா

7 தெள்ளிய மறையும் காணுதற் கொட்டாச்
சிவைமறை தலும்புரை தவிர்ந்தோன்
பொள்ளெனவெழுந்தான்; கரங்களைக் கூப்பிப்
புராந்தகி கருணையை வியந்தான்;
துள்ளினான்; இன்பப் புணரியிற் கரைந்தான்;
துணையறு நிலையினைப் பெற்றான்;
ஒள்ளிய தேவி யருண்மது நுகர்ந்தோ
ரொருநிலை எங்ஙனம் பெறுவார்?

8 மெய்யுண ரறிஞ னுலகெலா மீன்ற
மெல்லிய விளமையிற் றன்னைப்
பொய்யற வாண்ட தகைமையும் கனவிற்
பொற்புறக் கூறிய திறமும்
மையறு கருத்தி னினைதொறு மடங்கா
மகிழ்வினிற் றிளைத்தன னேனும்
வெய்யமா லொழித்துத் தனிநிலை நல்கும்
மெய்த்துற வடைந்திடா திருந்தான்

9 விஞ்சிய செல்வம் பொலிந்தநம் மனையில்
விருந்தின ருறவின ரயலார்
எஞ்சலின் மகிழ்வோ டுண்டுடுத் திருப்ப
வினையிலா மானத்தைத் துறந்து
பஞ்சையர் கோலம் பூண்டய லாரிற்
படிதொறு மிருகையேற் றுண்டு
நைஞ்சிட நேரு மென்றுளத் தெண்ணி
நற்றுற வடைந்திடா திருந்தான்

10 பண்ணிய வடிவா மாவினுக் காகப்
புனவிரந் திடினுமப் போதே
நண்ணிய பெருமை குறையுமென் றறிஞர்
நவிலுவர்; சாண்வயி றோம்பத்
திண்ணிய மான முகுத்தயல் வீட்டிற்
றினந்தொறு மிருஙகையேற் றுண்டு
மண்ணிடை யுறங்க நேருமென் றெண்ணி
மகிழ்துற வடைந்திடா திருந்தான்

11 செவ்விய தநயன் றுறவுமேற் கொளாமற்
சீரிய மானமேற் கொண்டு
கவ்வையற் றிருப்ப மகிடனைக் கொன்ற
கனங்குழை மீளவு மன்பன்
எவ்வயில் கனவிற் றோன்றி "யெம்மைந்த!
வியப்பலா மானமே கருதி
அவ்விய மவிக்குந் துறவினைப் பழித்தா
யதன்பய னுணர்ந்திலை போலும்"

12 "அன்புறு மதலா யொழிக! நின் மானம்!
அரியநற் றுறவுமேற் கொள்க!
துன்புறு மாய வாழ்வினை நினைபோல்!
தோன்றுவ யாவையும் பொய்யாம்!
இன்பமெட் டுணையு மிவற்றினி லில்லை!
இவைவிடுத் தகலுதி! யின்னே!
பின்புயர் வுறுவாய்! அடிசிலை நினைந்து
பின்னிடேல்!" லெனவுரைத் தகன்றாள்

13 பின்னரு மறிஞன் றுறவுமேற் கொளாது
"பெரும்புகழ்த் தேவியே! அடியேன்
நின்னடிக் குற்ற தொண்டுகள் செய்திந்
நிலைவழா திருந்திட வருள்க!
மன்னுநற் றுயில் குழவிபோ லடியேன்
வருந்துறக் கைவிடேல்" லென்று
சென்னியிற் கரஞ்சேர்த் துளமயர்ந் திருந்தான்
தீர்ந்திலன் குலப்பெரு மானம்

14 மறைமுடிச் செல்வி பின்னரு மன்னன்
மகிழ்வுறக் கனவினிற் றோன்றிப்
"பொறைவள ருளத்தாய்! என்சொலைக் கேளாய்!
புலைப்பிறப் பொழிந்திட வேண்டின்
நிறைதவத் துறவு மேற்கொள வேண்டும்;
நிகரிலாக் கனிபறி யாமற்
குறைவுறு காயைப் பறிப்பரோ? பிறவிக்
கொடுந்துயர் மறந்தனை போலும்"

15 "கலையுணர் மதலாய்! மறையவர் குலத்தும்
கடுந்தொழிற் புலையர்தம் குலத்தும்
உலைவுறு மொட்டர் குலத்தும் நீ! தோன்றி
யுழன்றனை; யிப்பெரும் பிறப்பில்
தொலைவுறு புகழ்சா லிரட்டியாய்ப் பொலிந்தாய்;
தொடர்ந்தினிப் பிறப்புறாத் தெய்வ
நிலையுறத் துறவு மேற்கொளென்" றன்பால்
நிகழ்த்தினள்; மறைந்தனள்; அம்மா

16 மும்முறை யன்பிற் கனவிடைத் தோன்றி
முரணறு துறவுமேற் கொள்ளென்
றெம்மையா ளுடைய நாயகி மொழிந்தும்
இறையருட் பெருக்கினிற் றிளைத்த
செம்மனத் தண்ணல் துறந்திடா திருப்பத்
திரிபுர சுந்தரி குன்று
மெய்ம்மையன் பீர்ப்பப் பெயர்த்துமன் புடையான்
விரும்புறக் கனவினிற் றோன்றி

17 "மைந்தநின் றியக்க மொழிகுதி யெனது
மாண்புறு காட்சியால் நின்பால்
நந்திய துயர மகன்றிடு மளவா
நலம்பல விளையுமில் லறமாம்
வெந்துயர் நல்குங் கருங்கலைப் பூண்டு
மிகுபரப் புறுபிறப் பென்னும்
சிந்துவைக் கடப்ப தருமை நற்றுறவாம்
தெய்வமே கைக்கொளவேண்டும்"

18 "தீதிலா மைந்த! என்பெரு மாயைத்
திறத்தினை யுணர்ந்தவர் சிலரே
வேதமு முணரா தென்னையே பற்றின்
விளங்குவ னப்பெருஞ் சூழ்ச்சி
பூதலப் பொருள்க ளெலாமழிந் தொழியும்
பொருந்துகாற் பணத்தினைப் புதைத்துச்
சோதனை செய்து தெளிகவென்" றன்பாற்
சொற்றனள் மறைந்தன ளம்மா

19 பூங்குழற் றேவி கூறிய வண்ணம்
பொருந்துகாற் பணத்தினை யிருகால்
பாங்குறப் புதைத்துச் சிலபகல் கழித்துப்
பரிவொடு நோக்கவஃ திலாது
நீங்கலு மன்பன் மனந்தளர் வுற்"றிந்
நிலையுறக் காரணம் யா"தென்
றோங்குநல் லுளத்தி லாய்ந்தனன்; கனவி
லுற்றிவை யுரைத்தன ளன்னை

20 மாசுதீர் மதலா யிப்பணம் போன்றே
மாநிலத் துளபொரு ளெல்லாம்
நாசம தாகும்; காசினைத் தொட்டால்
நலமறு கடத்தினி லிருந்தால்
காசினி தன்னிற் பிறப்பிறப் புற்றாற்
கருமமாம்; பிலத்துளே யன்றும்
தேசுசால் குடிலை யாய்விடிற் கருமம்
தீர்ந்திடு" மெனப்புகன் றகன்றனள்

21 நல்லற வாழ்விற் பொலிந்தவன் குன்றா
நலமுறு மடியவரை யாள
வல்லவள் பல்காற் கனவினிற் புகன்ற
வாசகம் நினைந்துளங் கலங்கி
இல்லறம் துறவா திருந்தனன்; அங்கா
லினியவர் பலரிறந் திடவும்
அல்லலுற் றழிந்தான்; மீளவுந் தேவி
யவன்கன வுற்றிதை மொழிந்தாள்

22 "தீட்டுசீர் மதலாய்! ஒட்டனாய்த் தோன்றித்
திண்ணிய கல்சுமந் திலையோ?
நாட்டினிற் றெட்டி யாய்ப்பிறந் தெருந்தை
நலிந்திடச் சுமந்திளைத் திலையோ?
ஒட்டினைச் சுமந்தா லென்குறை நேரும்?
உடன்வெளி யேறுக; வழியான்
காட்டுவ னென்"று மறைந்தனள்; தேவி
கருணையை யாரளந் தறிந்தார்?

23 பஞ்சடி யுமையாள் மறைதலு மன்பிற்
பழுத்தவன் துயிலுணர்ந் தெழுந்து
"விஞ்சுமன் புடையோய்! நின்மொழி பிழையேன்;
விடுத்தனன் யாவையும்; நீயே
தஞ்சம்";என் றியம்பிப் பொருவிலில் விடுத்துத்
தவவுயர் துறவுமேற் கொண்டு
செஞ்சுடர் மலரு முன்வழிக் கொண்டான்
சிறந்தசித் தூரினை நோக்கி

28 நலங்கெழு சுற்றம் பின்னரும் வேண்ட
நவையிலா னவர்தமை நோக்கிக்
"கலங்குதல் தவிர்மின்; என்றுற வொழிக்கக்
கருதுவ துறமல" வென்று
புலங்கெழு மாற்றம்; பலபல பகர்ந்து
போக்கினன் அன்பினிற் குன்றாக்
குலங்கெழு மக்கள் கண்வழி புனலிற்
குளித்துவேட் கூரடைந் தனரால்.

29 வருந்திய சுற்ற மகன்றபின் மோன
வரம்பினைக் கண்டவன் குன்றாப்
பெருந்தவம் புரிந்தான்; வைசிய னன்பிற்
பிணித்தசிற் றுணவலால் வேறொன்
றருந்திலன்; பன்னாள் தேய்ந்தபின் சீறவி
யருளினாற் பிடிமண லுணவை
பொருந்துநன் னீரே யருந்தினான்; பிறர்பாற்
பொருளைபெற் றிடாதுவாழ்ந் தனனால்

30 பொங்கெழிற் சோலை யிடத்தினு மெங்கும்
பொலிதரு நதியினும் வான
மங்குலைத் தடவு காட்டினு முற்று
மாசறு தவத்தினிற் றிளைத்துத்
துங்கவாழ் வெய்திப் பொலிந்தனன்; ஆசிற்
றுளங்கலில் ஞானத்தைப் பெற்ற
அங்கண னென்னப் பொலிந்தவேட் கூரோ
டனைத்தையும் துறந்தவ னம்மா.



ஓம்

குகாய நம:

# யாத்திரைப் படலம்.

1 பிரமபுரத் தெழுகுழவிக் கமுத மொடு
சிவஞானம் பேணித் தந்தாள்
வரமலிபொற் பதமலரை மறவாதான்
மருணீக்கி வயங்கு நாளில்
பரமனிவ னெனவுணர்ந்தோர் வரம் வேண்டி
யிடையூறு பல்காற் செய்ய
வுரமலிதன் தவங்கெடுமென் றுணர் வுற்றான்
வேமன்ன யோகிக் கொப்பான்.

2 சுந்தரஞ்சேர் பொழில்புடைசூழ் வாதவூர்ப்
புனிதனெனத் துளங்க லின்றி
முந்துபரம் பொருளியல்தேர் தவராச
னிடையூறு முற்றும் நீங்கிச்
சிந்தைபரங் கொளநினைத்தான்; அதற்கேற்பப்
பொலியுமிடம் தெய்வ மாறன்
சந்த மறைப் பொருளாகும் வேங்கடமென்
றெண்ணி யகம்தழைத்தா னம்மா.

3 பூங்கமலத் திருவுடனே மால்வயங்கு
வேங்கடம் போய்ப் புனிதயோகம்
பாங்குடனே செய்துமென எண்ணியருட்
பரந்தாமன் பாத மெண்ணி
ஓங்குமெழிற் பனுவல் புகன்றான்; அந்நூல்
நூறுமணி யொன்றாய்க் கோத்த
தீங்ககல் நன்மாலையெனப் பொலிந்தது; வேங்
கடத்தப்பன் செவி மடுத்தான்.

8 துங்கமுறு முனைர் வுடையா னிவனென்றே
யறிந்தயதி தூய்மை மிக்கான்
பங்கயமொன் முகம் நோக்கிப் "பிரம்மேந்த்ர
நும்மனையார் பாரி லில்லை
தங்கள் குரு யாரெ"ன்ன எனையாண்ட
தவத்துறவி சற்றே நக்குச்
சங்கையிலா தருள்ஞானப் பிழம்பனைய
சிலசொற்கள் சாற்றலுற்றுன்.

9 "பொய்யகன்ற நண்புடையாய்! பாரென்னல்
பரவெளியாம்; புனித மெய்தி
மையகன்ற மகிழ் செய்வதுள் வெளியாம்
உலகமெலா மலரச் செய்தல்
கையகன்ற மனவெளியாம், கண்டறிந்தா
லொளி வெளியாம், கழறு மிந்தச்
செய்யநிலை யுணர்ந்தவரென் குரு"வென்று
னம்முனிவன் திகைத்தான் பின்னும்.

10 சீருடையோய்! வேதாந்த விசாரணையா
லுணவுண்ணும் செயலும் நீத்துப்
பாரனைத்தும் துறந்தனையோ? என்றுரைத்தா
னிதற்கு விடை பகர்ந்தான்; "ஐய!
பேருடைய வேதாந்தம் வெளியாகும்!
சித்தாந்தம் பிறங்கு சோறும்!
வேரறியார்க் குடலாகு மிஃதறிந்தோர்
என்குரு" என்றுரைத்தான் மெய்ம்மை.

11 இந்தமொழி கேட்டமுனி பெருவியப்புற்
றிவர்க்கிணையார்? இவரே மெய்ம்மைக்
கந்தழியின் நிலையுணர்ந்தோர்; மணியனைய
செஞ்சொற்கள் கனிந்து சொற்றார்
சிந்தைவயப் பிழந்தேன்யான்; ஆந்திரங்கற்
றிவ்வண்ணம் தெளிந்தார் என்றே
முந்துமுளத் தெண்ணுதலு மிறை நிலைதேர்
குலமுனிவன் மொழியலானுன்.

12 படித்திடில் வெண் பல்தெரியும் பார்த்திடிலச்
சிவந்தெரியும் படித்தால் சோறுண்
டடுத்து வினை செய்யற்க பகுத்துணரிற்
சுகமுண்டீ தறிந்தோ ரைசான்
தொடுத்த பிறப் புறல்பாவம் இறப்பதுமுன்
ணியமிருத்தல் தொலையாக் கன்மம்
தடுத்த பிறப்பிறப் பற்று வாழ்வதுபே
ரின்பமெனச் சாற்றி ஞைல்.

13 செவ்வியநன் மொழிகேட்டோன் "பெருந்தவ நின்
மதம்யாது? சீர்த்தி மிக்குக்
கவ்வைதவிர் சைவமோ? உலகு புகழ்
வைணவமோ? கவின்சால் நீறோ
எவ்வமறு திருமண்ணோ நெற்றி மிசைக்
கண்டிலன்யான்; இவையந்த கன்மம்
ஒவ்வியதாய்த் தெரிந்திலன் என்?" என்றுரைத்தா
னதற்குவிடை யுரமேவான் சொல்வானன்.

14 ஊர்க்குள்ளே யிருப்பது நன்றுமாம்; நம்முள்
ஒளிருவது குன்றாத நாத நாமம்;
ஊர்க்குள்ளே யிருப்பது வீழ்வெள்ளி; நம்முள்
உறங்குவது துளங்காத வெளியாம்; என்றும்
ஊர்க்குள்ளே யிருப்பதுவான் முத்தி; நம்மு
ளுலவுவது குன்றாத மூச்சாம்; சால
ஊர்க்குள்ளே யிருப்பதெழிற் கங்கை; நம்மு
ளுடனுறைவ தின்பமருள் சிவலிங்கம்"

15 "நம்முளிருப்பது மனக்கண்; ஊரினுள்ளே
நயமுடனே விளங்குவன மணிகள்; என்றும
நம்முளிருப்பன பூதம்; ஊரினுள்ளே
நலம்செய்வ தொளிசெய்யும் பஞ்சவர்ணம்;
நம்முளிருப்பது மகிழ்வாம்; ஊரினுள்ளே
நகுவதுனுமரிசி; இதை நன்கு தேர்ந்தோர்
நம்முளிருந் தருள்குருவாம்" என் றுரைத்தான்
நன்றென்று கேட்டமுனி நனிமகிழ்ந்தான்.

16 சொல்லமுத மருத்தியபி னின்னமுது
முணச்செய்து தூய்மை மிக்கான்
நல்ல முனிவரனுடனே பன்னூடு ;
பின்பொழிய நடந்து வெய்ய
அல்லலறுத் தருள் தந்தை தாயாகி
யுலகுயிர்க ளன்பி னேத்தத்
தொல்லையருட் பொலிவொடு வாழ் சிராப்பள்ளி
யடைந்து மிகுசோர்வு நீங்கி.

17 பொருந்துகரு வூர்வழியாய்ப் பழநிவரை
செல்வமெனப் புந்தி யெண்ணித்
திருந்துவளம் சாலூர்கள் பலகடந்து
கட்டளையாம் சிற்றூர் தன்னு
ளிருந்த தனிச் சோலையினி லினிதிருந்தா
ரன்பினர்கள்; இருந்த காலை,
யருந்தவம்செ யிருதுறவி யவண் வந்தார்
நால்வர்களு மக ங்கலந்தார்.

18 வந்தவிரு துறவியரு மிருந்தவர்தம்
முகம்நோக்கி "மாண்பு மிக்கீர்!
நந்துபெரும் பொழில்புடைசூழ் காட்டுப்புத்
தூர்வயங்கு நலம்சால் செல்வன்
இந்தவுடை யாரைரூபாய் தந்தனன் நீர்
சென்றிடினு மெய்தலா" மென்
றுந்திய நண்புட னுரைத்தார் சிவைருள்தேர்
நம்முனிவ னுகந்தா னில்லை

19 மற்றமுனி வரன் அவற்றைப் பெறநினைந்திம்
முனிவனுடன் வாழையோடு
துற்றவளப் பூம்பொழில் சூழ் காட்டுப்புத்தூர்
அடைந்து தூயோன் றன்னை
யுற்றகுண திசை வயங்கு சாவடியி
லிருத்தியெழி லூர்க்குட் சென்றான்
கற்றதனலாய பயன் தேர் முனிவன்
பிரமத்திற் கலந்திருந்தான்

24 செய்யவளம் தருகாட்டுப் புத்தூர்வாழ்
மாந்தருளச் சிறப்பு நோக்கிப்
பொய்யகன்ற னருள்கொண்டான்; அன்னவரும்
நாமெல்லாம் புனித மெய்த
வையமிசைக் குடிகொண்ட தெய்வமென
எண்ணியவன் மருவி வாழத்
தூய்யசிறு குடிலமைத்தார்; அக்குடிலிற்
பிரமேந்த்ரன் துலங்க வாழ்ந்தான்

25 சங்கரமா முனிவனருள் சௌந்தரிய
லகரியெனும் தண்பூங் காவில்
பொங்குகவி மேடைமரும் பிராட்டியருள்
கருணையினற் புனிதப் பொன்னி
தங்குபடி மணலுடனே நன்னீரு
மருந்தியயல சார்ந்தே லாமால்
தூங்கமுற வாழ்ந்திருந்தான்; உலகுபுகழ்
பட்டினத்துச் சோதி யொப்பான்

26 நண்ணியவான் முகிலனையான் திருவருளால்
மகப்பேறு தழைத்தோ ரன்பால்
நண்ணியெமக் குறுதொண்டு புகல்தியெனத்
திருவாளன் நன்கா ராய்ந்து
திண்ணியவாழ் வருள் பசனை மடமொன்று
செய்மினெனச் செப்பி ஞனைப்
புண்ணியரு மவ்வண்ண மியற்றி னர்கள்
தெய்வமவண் பொலிந்த தம்மா

27 கற்புநெறி பிறழாத மனைவியர்க
ளிருவருக்கும் கவிஞர் தெய்வப்
பொற்புநிறை மகவின்றி யுளம் வருந்து
அப்பாதுரையாம் புனிதன் நாளும்
அற்புவளர் முருகனையும் பிரமேந்த்ரன்
திருவடியு மன்பிற் போற்றி
நற்பயனெய் திடுகாலம் நோக்கியிருந்
தான் பன்னாள் நகர்ந்த வம்மா

28 மன்னுசில நாளகலப் பிரார்த்தனை செய்
நற்பயனால் மாசி லாதாள்
நன்னிதிநே ரொருமகனைப் பெற்றெடுத்தாள்;
அதுகண்டு நல்லோன் சாலப்
பன்னரிய மகிழ்வெய்திப் பிரமேந்த்ரன்
திருவடியைப் பணிந்து தான்செய்
துன்னுபிரார்த் தனைமுடியப் பழநிவரை
வருக எனச் சொற்ற னனபால்

29 தெள்ளியநண் புடையவன்சொல் மறுத்துதனிப்
பழநிவரை சென்று செவ்வேள்
வள்ளலடி மனமுருகப் பணிந்துயர்காட்
டுப்புத்தூர் மருவி னைல்
வெள்ளியசே வற்கொடியோன் திருவடியைப்
பணிபோழ்து விரும்பிச் சொற்ற
ஒள்ளியநன் மொழிகாண்மின்; அதன் பொருளிற்
றேய்ந்திடுமி னுயர்வுண்டாகும்

"பார்த்தால் பழநிமலை பார்வையிட்டால் தங்கமலை. ஆடி விளையாடி யமர்ந்திருக்கச் சொல்லுமலை. அதிசயம் என்ன சொல்லுவேன். சுப்பிரமணியனைக் கண்டால் வெகுசந்தோஷம் கல்லா யிருக்கிறன். காட்சிபெற்று தேகத்தை விட்டுவிடுவேன். தேகத்தை விட்டால் குரங்குபோலிருக்கிறன். கொண்டுவா காசென்கிறன் பஞ்சாமிர்த அபிஷேகம் பண்ணச்சொல்லி எகிறிக் குதிக்கிறன். அவன் முன்னாலே செய்துவைத்த சிலை சுவாமி என்றால் பேசாது சாதமிட்டால்சாப்பிடாது வரங்கொடே னென்று குந்தியிருக்கும் ஒன்றும் அறியமாட்டேன் ஓங்காரம் ஒன்றறிவேன் தன்னையறிவேன் உன்னையறிவேன் பின்னையொன்றும் அறிய மாட்டேன் பூதேவி சாக்ஷியாய் தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு"

30 புண்ணியவாழ் வளித்தருளும் சமாதியினிற்
சமயமெலாம் போரிட்டென்றும்
நண்ணியறி யாதபரம் பொருளையடைந்
துயரருளை நாளும் பெற்று
எண்ணியநன் னினைவினிலே தமையடைந்தோர்க்
கருள்செய்வ னிவன்போல் யாரே
தண்ணளிசெய் தனருலகில் இவன்கீர்த்தி
நாடோறுந் தழைத்து வாழ்க!

ஓம்.

சிவமயம்.

# சமாதிப் படலம்.

1 பொற்பார் வயல்சூழ் தருகாட்டுப்
புத்தூர்க் கணியாய் நம்பெருமாள்
அற்பால் வாழ்ந்தான்; பதினையாண்
டகன்ற பின்னர் சிவையருளால்;
நற்பேற் றிறைக்கோ றுறையுளென
நகுஞ்சீர்க் கோட்டை யம்மைபால்
"எற்பா ராட்டி நிறையடிசில்
ஈகென்" றன்போ டருள் செய்தான்

2 செய்ய குரவன் ஆணையினைச்
சிரமேற் றாங்கி யம்மையார்
மெய்யன் புடனே கொணர்ந்தனை
மிக்க விழைநர் சூழ்ந்துண்ண
ஐயன் றுறவிற் றிருந்து மகிழ்ந்து
தன்பி னொருநாற் றோற்றன்றேய்!
ஐய நாமம் கொள்ளாமற்
பரிந்தூ ணளித்தாய்க் கென்வணக்கம்

3 உண்ட சிறுவாய் கொள்ளாமிக
வுற்ற வயிறு நிறைவெய்தக்
கண்டத் திடையே போம்படியோர்
கவளம் தந்தாற் போதும்; இவன்
கொண்டோன் விடான்;கண் டவன்காட்டான்;
கொணர்க! சோறும் மாவென்பான்;
விண்டிப் பொருள்தேர்ந் தவளெனது
மெய்ம்மைக் குருஎன் றுரைத்துண்டான்

4 அன்று தொட்டுப் பரமபத
மடையுங் காறு மிவ்வளவே
ஒன்ற அருந்தி வந்தானென்
றுணர்ந்தோர் சொல்வர்; அயலூரார்
மன்ற இன்னோன் பெருமையெலாம்
மறுவற் றோர்ந்தார்; பல்காலும்
சென்று பணிந்தின் னருளெய்திச்
சிறந்தார் துன்பச் சிறைநீங்கி

5 வண்ணச் செழுந்தா மரைப்பாதம்
வயங்கு பேடை தரீஇயவனாம்
உன்னணைக் குருகு மருதவாந்
தொளிருங் காட்டுப் புத்தூரில்
நண்ணும் பெருமா நிலக்கிழவன்
நயக்கும் பண்ணைச் செயலாளன்
தன்னனென் கருணை நிறை ஞானசாரி
என்போன் தகவாழ்ந்தான்

6 விருந்து மகிழ அறம் பேணும்
மிகுசீர் வாழ்க்கைத் துணைவியொடு
பரிந்தில் லறத்தைத் தகவாற்றும்
பண்பின் மிக்குப் பிரமேந்திரன்
திருந்து பாதப் போதினிலே
சீரார் தொண்டு செய்தன்னோன்
சொரிந்த ஆசி நனிபெற்றுத்
துலங்க வாழ்ந்தா னப்பெரியோன்!

7. எல்லாம் அதுஎன் றுணர்பெரியோற்
கினியன் புரிந்த தவப்பயனால்
பல்லோர் திலக வதியென்றே
பகரு மமுதத் தம்மையாரை
நல்லா தாரத்தாற் பெற்றெடுத்து
நன்னூல் பயிற்றிப் பருவத்தே
மல்லார் திண்டோ ளொருவீரன்
மகிழ மணஞ்செய் துவந்தனனால்

8 பழுதில் தலைவ னுளமகிழப்
பரிந்தில் லறத்தை நடாத்தியவன்
வழுவி லன்பிற் கிலக்காகி
வாழ்ந்தா ரமுதத் தம்மையார்;
தழுவு கிளைஞர் களி கூர்ந்தார்;
சான்றோ ரிதுவே தவமென்றார்;
விழுமிதீதென் றிவர் செயலை
வியந்தார் நயந்தார் ஊரினரே

9 திங்கள் பதினைந் திவ்வண்ணம்
சிறக்க வாழ்ந்தார்; அவர்வாழ்வில்
பொங்கு மன்பும் நல்லருளும்
பொலிந்தது; இதனைப் பொறுமலே
வெங்கண் மறலி யிடைப்புகுந்தான்;
மெய்ம்மை யன்பன் றனைப்பிரித்தான்;
தூங்க மணஞ்சால் மலர் பூத்த
சோலைக் கந்தோ நெருப்பிட்டான்

10 மிக்க அம்மை தன் றலைவன்
விண்ணே குதலும் தரியாது
தொக்க துயரப் பெருங் கடலிற்
றோய்ந்தார்; அலறித் துடி துடித்தார்;
தக்க சான்றோர் பல்காலும்
சாற்று முறையா லொருவாறு
புக்க துயர முளத்தடக்கிப்
போந்தார் தந்தை வாழ் நல்லூர்

11 தந்தை தேற்றத் தாய்தேற்றச்
சான்றோர் தேற்றத் தன்னுளத்தே
முந்துதுயர மடக்கி யிறை
முளரி யடியிற் குறையாத
சிந்தை வைத்தார்; அக்காலை
திருநெல்வேலி தனில் நின்றும்
வந்த பெரியா ரொருவரிவர்
வாழ்வு கண்டு நனிதளர்ந்தார்

12 நெல்லைப் பெரியார் பிரமேந்த்ரன்
நெடிய புகழ்கேட் டவளையமா நந்
தல்ல வில்லான் திருவடியை
யன்பிற் போற்றி யவன்பெருமைக்
கில்லை யெல்லை யென்றுணர்ந்தார்;
இனிதில் லடைந்தா ரம்மையால்
நல்லோய் கேட்டி நினக்கொன்று
நவில்வேன் வாழ்வு நலமெய்தும்

13. கருங்கம் பளம்போர்த் திவறுலவு
கருணாகரனை மனிதனென
இரும்பை யனைய வுளத்தினரே
யெண்ணி யழிவர்; இவன்பிரமம்;
வருந்து துயரப் பிணிநீங்கி
வளமார் வாழ்வு பெறவேண்டின்
திருந்து ஞான மூர்த்திபதச்
சேவை செய்தி யெனச் சொற்றாள்

14 ஈரந் ததும்ப அப்பெரியார்
இசைத்த தினிதென் றோர்ந்தம்மை
வாரந் தோறு முனிவனடி
வணங்கி வந்தார்; ஓர்போது
சீரன்புடையோன் "பல்காலும்
சேவித்திட நீ வார"லெனக்
கூரம் பென்ன வொரு வார்த்தை
குறித்தா னம்மை குலைவுற்றார்

15 ஐயன் சினப்பத் தரியாம
லந்தோ! வினையென் றகந்தளர்வுற்
றுய்யுங் கால மெதிர்நோக்கி
யுன்னியிருந்தா ரோர்காலை
செய்யகனலிற் றுவராடை
திகழ வொருவன் வந்தம்மே!
மெய்யன் புடையான் நினையழைத்தான்
விரைக என்று மறைந்தனனே

16 உற்ற கனவிற் சொற்ற வெலா
முண்மை யெனத்தேர்ந் தம்மையார்
பெற்ற குரவற் குணர்த்தி யவர்
பேராசிகளும் நனியெய்திச்
சொற்ற மறையின் முடிவினிலே
துலங்கும் பொருளே தானாகி
யுற்றமுனிவன் மலர் பதத்தி
லுண்ணெனக் குருகப் பணிந்தனரால்

17 பரிந்து முனிவ னம்மை முகம்
பண்பி னோக்கி யென்னன்னாய்!
வருந்தல் தவிர்க; நீயிங்கு
வருவா யோ! வாராயோ! என்
றிருந்தேன்; வந்தாய்; இன்றுமுத
லினிய தாயும் பிள்ளையுமாய்
பொருந்த வாழ்தல் நலமென்றான்
புவனத் தாயி னருட்பிள்ளை

18 பிறந்தா லிறவே லிறந்தால்பின்
பிறவேல்; இருக்கும் வரைகாணேல்;
சிறந்த குருவை யடைந்து நமைத்
தெரிய வந்தோ மென்றன்றி
மறந்தும் பிறர்க்குக் குருவாக
மனத்தி னினையேல்; காண்பவெலாம்
நிறைந்த பிரமம்; அது நீயாய்
நினைக வென்றான்; நினைவில்லான்

19 சீரார் நாவுக் கரசென்னத்
திகழும் பெருமான் புனிதத்தால்
பாரோர் திலக வதியென்றே
பகரு மமுதத் தம்மைக்குப்
பேரார் சிவத்தைச் சகம்மறைத்துப்
பொய்யுந் திறமு மஃதகற்றி
ஏரார் சகத்திற் சிவங்காணு
மினிய நெறியு முணர்த்தினனால்

20 வையம் புகழும் அம்மையார்
மாசில் பிரமேந் திரன்றனக்குச்
செய்ய தொண்டு தகச்செய்தத்
தேவன் வாக்கே வேதமெனப்
பொய்யி லுள்ளத் திடையமைத்துப்
புனித நினைவால் மறைமுடிவாம்
அய்யன் கருணைக் கிலக்காகி
யரிய வாழ்வை யெய்தினரால்!

21 இறையாம் பிரமேந் திரன்ஐம்பத்
தேழாம் வயதில் முனிவனுடன்
குறைவில் காட்டுப் புத்தூரில்
கோக னகச்செம் பதம் பதித்தான்
முறையா ரன்பொ டறுபத்து
மூவாண் டடியார் வாழ்வெல்லாம்
பிறைபோல் வளர அருள்செய்து
பின்னோர் தினத்தில் தனித்திருந்து

22 ஆரா நன்பால் நூற்றிருப
தாண்டு சுமந்த விச்சமையைச்
சீரா விடுத்து நாமாகத்
திகழ வேண்டு மெனநினைந்து
பேரா யோக சமாதியினிற்
பிறங்கி னானுன்ன டியும்நீத்தான்;
ஊரார் வியந்து துயர் கொண்டார்;
ஓர் நாள் சமாதி விட்டெழுந்து

23 பரிந்த வமுதத் தம்மையுயர்
பண்பார் வீட்டுத் திண்ணைமிசை
விரும்பி யமர்ந்தா னறிந்தம்மை
விரைந்து வந்து பணிந்தன்பால்
பெந்தன் மையினா னுணவின்றிப்
பிறங்கு நிலைகண் டுளமுருகி,
வருந்த லோர்ந்து, பிரமேந்திரன்
வடித்துச் சில சொல் புகன்றாளும்

"பசியெடுக்காது! பார்வை பறக்காது!
வாசியுறங்காது! யோகியானால்!
இளைப்பு கொடுக்காது ஏகாட்சரத்தில்
தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு

முத்திக்குப் பங்கமில்லை இனி இவன் பேசமாட்டான்;
வார்த்தைக்கு வார்த்தை இல்லை!
வந்து போக வாகன மில்லை!
கொடுத்து வாங்குகிற கடவுளாரில்லை!
தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு

வார்த்தை பெரிதல்ல! வந்துபோவது பெரிதல்ல!
சோத்துக்கிருப்பது பெரிதல்ல! சுணங்கள் போல்
கண்டறிகிறது பெரிது!
கண்டநாதத்திற்குள் கண்மணியைத்
தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு

கண்மணியைக்கண்டு காட்சி பெறமாட்டாமல்
பொய்மணி மேலாசை கொண்டு பிறந்திறந்தேன்
சுவ்வோர சங்கற்பம் என்ன செய்யலாம்!
தெரிந்து கொண்டவர்தான் குரு எனக்கு;"

24 ஐயன் மொழிகேட் டம்மை துய
ரவித்தார்; சின்னாளகன்ற தன்பின்
மெய்யன் புடையோர் புடைசூழ
மேலோன் யோகத் தினிதிருந்தான்;
உய்யும்படி யன்னவன் மேனிக்
குள்ளோர் சோதி புறம்போந்து
செய்ய விண்ணிற் கலந்தது; கால்
சேரும் முல்லை மணமென்ன

25 சீரார் வேட்கூ ரெனும் வரையிற்
சிறக்கத் தோன்றி யுலகுபுகழ்
ஏரார் சித்தூர் கடந்து சிராப்
பள்ளி யிகந்து குயில்பாடும்
ஆரா மஞ்சூழ் தருகாட்டுப்
புத்தூர்க்கமுத வளம் நல்கிப்
பேரார் பிரமக் கடலூடு
பிணைந்த தருண்மா முனிநதியே

26 பன்னாள் உலாவும் பிரமத்தைப்
பரிவிற் றுங்கி யசையாம
லின்னா ளுறங்கு திருமேனிக்
கினிய சமாதி புனைந்தன்னேன்
பொன்னார் சடையோன் வடிவாகிப்
பொலியுந் திறத்தை யுலகுணர
மன்னு வலர்கள் சிவலிங்க
மருவச் சமாதிமேல் வைத்தார்

27 முடிவில் பெரும்பா ழெனக்குருகூர்
முளைத்த சோதி வாய்மலர்ந்த
படியே திகழும் பிரமத்திற்
பரமன் கலந்த பின்னம்மை
நெடியோன் மகிழும் சமாதிக்கு
நிகரில் விழாக்கள் நனிசெய்தே
டடியார் தமக்குப் பெருவாழ்வை
யளித்தார்; துயரமகன்றிடவே

28 சீரிற் பிறங்கு மம்மையருட்
செல்வ மெய்தி யெஞ்ஞான்றும்
பாரிற் பிறவா னடிபேணும்
பழநி யடிகள், குன்றுத
பேரிற் சிறந்த சுப்பைய
சாமி — இவர்கள் பிறழாது
நேரொத் தினிய தொண்டுசெய
நெடியோன் சமாதி பொலிந்துளதால்.

29 மருளே யகன்றிவ் வுலகமெலாம்
வாழ எண்ணு மம்மையார்க்
கருளே புரிந்தோன் திருச்சரித
மன்பின் றுணையா லுரைசெய்தேன்;
தெருளே கொண்டீ தோதுநர்கள்
திருந்தில் லறத்திற் றகவாழ்வுற்
றிருளே தவிர்க்கும் துறவறத்தி
னினிய பயனும் பெறுவாரால்

30 சீரார் பிரமேந்திரன் வாழ்க!
திகழு மம்மை புகழ் வாழ்க!
ஏரார் தொண்டர் குழாம் வாழ்க!
இனிமை நிறை செந்தமிழ் வாழ்க!
பேரார் ஆட்சி நனிவாழ்க!
பிறங்கு வேத நெறி வாழ்க!
ஆராய்ந் திந்நூல் கற்கு நர்க
ளனைத்து மெய்தி வாழ்கவே.

பிரம்மேந்திர கீதம் முற்றிற்று.

கலம் தழைக.



ஓம்

## பிரம்மேந்திர கீதம்

# குறிப்புரை

### பாயிரம்.

நூல் கற்கும்போது இக்குறிப்புரையை அவசியம் உபயோகிக்கவும். இக்குறிப்பில் சரித்திரக் குறிப்புக்களும் சொற்பொருட் குறிப்புக்களும், மேற்கோட் குறிப்புக்களும் பொறிக்கப்பட்டுள்ளன.

அஞ்சக்கரத்தினன்-ஐங்கரன் (விநாயகன்) நெஞ்சத்தடம்-உள்ளமாகிய தடாகம். ஐங்கரன் திருவடித் தாமரைகள் மலர்ந்தமையால் என் உள்ளமாகிய தடாகம் ஒளி பெற்றது.

1. வையம்-பூமி. சேவடி-சிவந்தபாதம். உயிர்ப்பு-மூச்சு. பூமியைப் பாதங்களாகவும், ஆகாயத்தை மேனியாகவும், திசைகளைக் கரங்களாகவும், சந்திர சூரியர்களைக் கண்களாகவும், காற்றை மூச்சாகவும் கொண்ட இறையின் தன்மையறிந்து அமைதி பெறுவோம். அரோ-அசை.

2. கலை-நூல். பாவலர்-புலவர். நாரி-கலைமகள். பாவலர்களுடைய மனத்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகளின் கண்களாகிய கயல் மீன்கள் விரும்பும் வேதக் காவின் கன்ற (பிரமன்) நல்ல வளங்களைப் பெறும் பொருட்டு மூழ்குவோம்.

3. ஆடி-அணுநோக்காடி. அணு-துகள். (ஆன்மா) மிக மிகச்சிறிய அணுவையும் காண்பிக்கும் ஆற்றல்வாய்ந்த ஆடிக்கும் அகப்படாத அணுவைப்போன்றவரும், மிகப்பெரிய மேரு மலையைப்போல் வளர்ச்சியடையும்படி அருள் செய்யும் திருமகள் என்னும் மின்னலோடு கூடிய மேகத்திடத்தே (திருமால்) என்றும் வாழ அன்பு செய்வோம்.

4. தெய்வ வெற்பு-தெய்வீகமலை (சிவம்) முனிவருடைய தகராலயத்தே விரும்பியமர்ந்த உமாதேவி என்னும்கொடிபடர்ந்த வெற்பை (சிவம்) தீவினை தீரப் பணிவோம். இங்கே "மரகதக் கொடியுடன் விளங்கும் தெள்ளுபேரொளிப் பவளவெற்பென"— என்ற தொண்டர் சீர்பரவுவார் வாக்கை நோக்குக.

## முனிவரன் புகழ்.

5. ஆரணம்-வேதம். கடவுள் நாரணன்-நாராயண பிரம்மேந்திரன். முனிவரைக்கடவுள் என்பது பண்டைய வழக்கு "கடவுள் நண்ணிய பாலோர்" என்பது குறுந்தொகை.

6. நற்பயன் தெரிதலாவது வாலறிவன் நற்றாள் தொழல்

7. அலங்கல்-மாலை. ஐம்பெரும் பகுப்பு-ஐந்து பூதங்கள். (கம்பநாடகம், சுந்தரகாண்டம் முதற்பாட்டை நோக்கவும்). **சோதியைக்காட்டினேன் என்பதில் அடங்கிய வரலாறு**-ஓர் நாள் இரவு பழனி மடத்திற்குவந்த கோபால் செட்டியார், அருணாசலம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை என்ற மூவரும் பக்கத்து அறையிலிருந்த சுவாமிகளை நோக்கித் தாங்கள் இருக்கும் அறைக்குத் தீபம் இருந்தால் சுகமாயிருக்கும் என்று கூறுகிறார்கள். சுவாமிகள் வேண்டாமென மூவரும் தங்களது விருப்பத்தை மறுக்கலாகாது எனப்பணிந்துரைத்தனர். சுவாமிகள் அவர்களை நோக்கி இரவு 10 மணிக்கு இவ்விடம் வந்து பாருங்கள். அப்போது தீபம் வேண்டாம் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள் என்றனர். அப்படியே மூவரும் மறுதினம் இரவு 10 மணிக்குச் சுவாமிகளின் அறையைச் சாளரத்தின் வழியாக நோக்க ஆங்குக் கட்பொறி கலங்கத் தக்கதோர் சோதியைச் சுமார் ஒரு மணி நேரம் கண்டனர்.

8. இலட்சுமி என்றது அனந்த லட்சுமி என்ற அம்மையாரை. **இப்பாவில் அமைந்த வரலாறு.** சுவாமிகள்

உண்கிற உணவு மிக மிகக் குறைவாய் (ஒரு கவளம்) இருத்தலை நோக்கிய அனந்தலட்சுமி சுவாமிகளை நோக்கித் தாங்கள் உட்கொள்ளும் அளவு மிக மிக நொய்தாய் (சிறிய அளவாக) இருக்கின்றதே. இது தங்களுக்குப்போதுமா என்று கேட்டனர். கேட்ட நம் அடிகள் "போதாது" என்றனர். அம்மையார் "ஆறுல் வீட்டுக்கு வாருங்கள் நிரம்ப அன்னம் படைக்கிறேன்" என்று சொல்லினர். நம் அடிகளும் அம்மையாரின் வேண்டுகோளின்படி அவர் வீட்டிற்குப் போய் அம்மையார் சமைத்து வைத்திருந்த மூன்றுபடி உணவையும் உண்டு பசித்தார் போன்று இருந்தனர். அம்மையார் பல வீட்டிலும் சென்று நிரம்பிய அன்னம் கொண்டு வந்து படைத்தனர். கொண்டுவந்த உணவு முழுவதையும் உண்ட நம் அடிகள் மீண்டும் பசிகொண்டார்போல மௌனமாயிருக்க அம்மையார் திகிலுற்றுத் தாம்செய்த செயலுக்கு வருந்தினர். அங்குள்ளோர் இஃது அறிந்து இனி எவரும் சுவாமியை வற்புறுத்தவேண்டாம். அவர் இஷ்டம்போல் நடந்து கொள்வது நம் கடமை என்று கூற அடிகள் புன்சிரிப்புடன் தம்குடிற்கு எழுந்தருளினர். நுணல்-தவளை. படி-வாசல்படி (மோட்சப்படி)

9. தன்மம்-தர்மம். கன்மம்-கர்மம். குன்மநோய் போக்கிய வரலாறு-நீண்டகாலமாகக் குன்மநோயால் பீடிக்கப் பட்டிருந்த குழந்தைவேல் பிள்ளையவர்கள் ஓர் நாள் விசார முகத்துடன் சுவாமிகளை அடைய "ஏன் அப்பா துன்புறுகிறாய். வேளை வந்தால் தானே போய்விடும்" என்று பிரமேந்திரர் கூறி வாய்மூடுமுன் அக்கொடிய வியாதி நீங்கக் குழந்தைவேல் பிள்ளை ஆனந்த பரவசராகிச் சுவாமிகளை வியந்து கொண்டாடினர்.

கல்மழைக்கு அசையாத வரலாறு-1904 ஆம் ஆண்டு (குரோதி, வைகாசி) காட்டுப்புத்தூரில் கல்மாரி பொழிந்தது. மக்கள் வெளிவர அஞ்சினர். வெளியிலகப்பட்டவரில் சிலர் காயமடைந்தனர்; சிலர் உயிர் துறந்தனர். பெருமரங்கள்

வேரோடு பெயர்ந்தும், ஒடிந்தும், சிதைந்தும் நிலைகுலைந்தன. மச்சுவீடுகளும் கால்சாய்ந்து பெயர்ந்து, வீழ்ந்து சேதமாயின. இல்லத்தில் ஒடுங்கி நடுங்கி இருந்தவர்கள் எல்லோரும் "சுவாமிகளின் கதி என்னவாயிற்றோ! சுவாமிகள் நிர்க்கதியாக இருக்கின்றனரே" என்று பலவிதமாய் எண்ணி வருந்தினர். மழை நின்றதும் யாவரும் சுவாமிகளின் குடிசையை நோக்கி ஓடினர். குடிசைமீது ஒரு சிறு கல்லும் விழாமல் குடிசையைச் சுற்றிக் கற்கோட்டையிட்டிருப்பதைக் கண்டு மக்கள் வியப்புற்றனர். அப்பர் நீற்றறையில் சிறிதும் கலங்காமல் பொலிந்தாற் போல நம் அடிகளும் ஓலைக்குடிசையில் யாதோர் இடையூறுமின்றி விளங்கினர்.

10. பிறங்கினேன்-விளங்கினவன். தேன்-அமிர்தம். இது யோகிகட்கன்றி ஏனையோர்க்குக் கிட்டாதது. இது சகஸ்ராரத்திலிருந்து வருவது. அறுசமயக்கான்-ஆறுமதமாகிய காடு. மருந்து என்றது சச்சிதானந்தத்தை.

11. சுவாமிகள் தெருத்திண்ணை சொந்தம் தெருவுக்கு வந்த சாதம் சொந்தம். அந்தக் கள்வி (தேவி) சொந்தம் வேறு ஒன்றும் சொந்தமில்லை என்று கூறுவார். கள்வி-உமாதேவி. குமரகுருபரர் "கனகள்வி" என்று பிள்ளைத் தமிழில் கூறியதை கண்டு நோக்குக. தேசன் - ஒளிவடிவானவன். வல்லாளன்-வல்லவன். "நமன்தமர் தலைகள்மீதே நாவலிட்டுழி தர்கின்றோம்" என்பது தமிழ் வேதம்.

12. மெய்ம்மை-பிரம்மம். இரண்டற கலத்தலாவது "கடல் ஞாலம் செய்தேனும் யானே" என்று அவன் செய்ததையும் தாம்செய்ததாக வகுளாபரணன் கூறினாற்போலக் கூறி அத்துவிதமயமாகப் பொலிதல்.

13. தேவி லலிதா என்ற பெயரோடு சந்திரனிலும், சாமுண்டீஸ்வரி என்ற பெயரோடு சூரியனிலும் விளங்குகிறார். "சந்த்ரமண்டல மத்யகா" என்றும் "பானுமண்டல மத்யஸ்தா" என்றும் லலிதா சகஸ்ரநாமம் கூறுவது நோக்கத்தக்கது. வேங்கடத்தெம் ஈசன் என்றது ஸ்ரீநிவாசனை. பூரணி என்றது ராஜராஜேஸ்வரியை.

14. கங்கை சூடிய கண்ணுதல் - கங்கை அணிந்த நெற்றிக்கண்ணன் (சிவபிரான்) பெருமைக்கு அடையாளமாக இறைவன் கங்கையை அணிகின்றான். "கங்கை உன்பெருமை காட்டும்" என்பது, கவிமணி-தேவி வாக்கு. இடப்புறம் கலந்த மங்கை-பார்ப்பதி. "சிங்கம் நுண்ணிடையைக்காட்டச் சிறையனம் நடையைக் காட்டும்" மங்கையோர்பாகா என்பதும் அப்புலவர் பெருமான் வாக்கு.

15. அவையடக்கம். எக்கர் - மணல். "சக்கரையாய்ப் பாடினேன்...எக்கரைப்பாடேன்" என்ற தனிப்பாவை நோக்குக.

## தோற்றப் படலம்

1. மூலப்பரை-பெரியபிராட்டி. 2. அமுதம் தண்ணீர் அமிழ்தம் என்றுணரற்பாற்று" என்பது வள்ளுவன் வாக்கு. ஏர் இயை எனப்பிரிக்க. ஏர்-அழகு. நூற்காட்சி-நூலறிவு. வானம் மழையை நல்கும்; புவி வளத்தை நல்கும்; உள்ளம் ஒழுக்கத்தை நல்கும்; தெய்வம் அருளை நல்கும்; நூற்காட்சி வாழ்வு நல்கும்; 3. எவ்வம்-துன்பம், கவ்வை-துன்பம். 5. இப்பாவில் விவேகானந்தரின் ஞான அமிழதப்பெருக்கினின்றும் ஒரு சிறு துளி சிந்தியிருக்கிறது. வர்ணாஸ்ரமம் இப்படி அமையவேண்டு மென்று குறிப்பிடப்பட்டுள்ளது. மக்கள் வேளாளர்களைப்போல உழைத்து, வணிகர்களைப்போலப் பொருள் ஈட்டி, அரசர்களைப் போல இன்பம் துய்த்து, துறவிகளைப்போலப் பற்றற்று வாழ வேண்டும். 7. உக்க போதும்-சிதறியகாலத்தும். வானம்-பரந் தாமம். விமலன் என்றதுபரவாசுதேவனை. "பூதமெலாம் உகினும்

மறுகாநெறி" என்பது இராமாவதாரம். 10. சினகரம்-கோயில். இச்சொல் பழங்காலத்தில் ஜைனர்களுடைய கோயிலுக்கே வழங்கிய சிறப்புப்பெயர். இன்று எல்லாக்கோயில்களையும் உணர்த்துகிற பொதுப் பெயராகிவிட்டது. ஒள்ளிய-நல்ல (கன்னடச்சொல்) 11. வேங்கடாசல வள்ளல் மூன்று புதல்வரைப் பெற்றனர். அவர்கள் அறம் பொருள் இன்பம் போலப் பொலிந்தனர்.

12, 13 பாட்டுக்கள் குளகம். முப்புதல்வர்ப் பேற்றால் மகிழ்ந்து வாழும்போது இக்காவியத்தலைமகன், வேட்கூர் நலம் பெறவும், சான்றோர் பயன்பெறவும், தேவி அகமும் புறமும் தூய்மையெய்தவும், நாலாம் பேற்றினைப்போலப் பிறந்து விளங்கினன் எனக்கொண்டு கூட்டிப்பொருள் கொள்க. நாலாம் பேறு என்றது வீட்டை. முன்னைய மூன்றுபுதல்வர்களும் அறம் பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களைப்போல விளங்கினர். நம் அடிகள் நான்காவது உறுதிப் பொருளாகிய வீட்டைப்போல் விளங்கினர்.

14. முகிழ்த்த-தோன்றிய. பெற்றி-தன்மை.

15. இந்திரர் அமுதம்-தேவாமிர்தம். "இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும்" என்பது புறம். தனை உணர்தலாவது நான் யார்? என்று விசாரித்தறிதல். "தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் உணர்ந்தானுகில்" என்பது கைவல்யம். 16. இப் பாவில் "தந்தை மகற்காற்றும்" என்று தொடங்கும் குறள் மணியின் ஒளி பட்டுள்ளது.

17. தூயவன்-சிவபிரான் "பொற்சடை நின் மலக் கொழுந்து" என்று அருமையாகப் பாராட்டுவர் கம்பர். பற்றற்றவன் ஆதலின் இறைவன் தூயவன் எனப்பட்டான். "தூய்மை என்பது அவாவின்மை" என்று நம் மறை கூறுகிறது. 18. நாவாய்-கப்பல். 19. வீறு-வன்மை. அறம் தருநெறி என்றது,

சமயத்தை. "சமயம் வேறு, சமயவாதம் வேறு. சமயவாதத்தைச் சமயமாகக்கொண்டு சிலர் சமயத்தையே தாக்குகின்றனர்" என்றும் "சிக்கோடும் மதவாதச் சேற்றிருந்த எனையெடுத்தே" என்றும் நம் தமிழ்ச்சான்றோராகிய திரு. வி. க. அவர்கள் உணர்ந்து கூறிய மணிவாசகங்கள் ஈண்டு கருதத் தக்கன. 20. தவ-மிகவும். முளரி-தாமரை "முள்ளரை முளரி வென்ற நோக்கினுல் முதிர்ந்த காதல் வள்ளியின் அழகை உண்டாளும் வேலன்" என்பது வரதோதயம். 21. காமசாத்திரத்திற்கு இலக்காக வேண்டிய இளம்பருவத்தே சுவாமிகள் தவசாத்திரத்திற்கு இலக்காகிப் பொலிந்தனர். காமம் அரும்பும் விளைநிலமும் ஒரு வகையால் கூறப்பட்டுள்ளது. வரம்-சிறப்பு. வையமீன்று புரந்தவள் என்றது உமாதேவியை. "எழுபெரும் புவனம் முழு தெருங்குதவு மிறைவி" என்பது அருட்கவிஞர்-குமரகுருபரர் வாக்கு. 22. செவ்வி-பருவம். மணம் முடிக்கத் தந்தை விரும்பினன். தூயன் மருத்தனன். மருந்தினை நுகர்ந்த தூயன் என்று மணஞ்செய்து கொள்ள இயலாமைக்குக் காரணம் கூறப்பட்டுள்ளது. மருந்து-பிரம்மம் 23. வயிரவி-உமாதேவி. "வயிரவி தன்னுடைவில்" என்பது கவியரசர் பாரதிவாக்கு. நடத்துக்கு ஏற்பத் தாளங்கொட்டும் வயிரவி என்க-இறைவன் அருட் கூத்தியற்றும்போது தேவி தாளங்கொட்டுவாள் என்பதை "கலித்தொகை" "பாதசேகுபதீயம்" "குமரகுருபரர் பிரபந்தம்" முதலியவற்றிற் காண்க. 24. சுவாமிகள் மணம் செய்து கொள்ளாமல் தேவியின் பாதத்தையே சிந்தித்து வாழ்ந்து வந்தனர். இறைவன் தலையிற் சூடிய கொன்றைப் பூவின் மகரந்தம் படிந்த பாதத்தை உடையதேவி என்க. எம்பிராய். என்தாய். என் இனிச்செய்வ தெம்மோய். (கம்பநாடகம்)

25. பன்னிய-அடிக்கடி வற்புறுத்திய. நம் அடிகள் அன்பு காரணமாக மணம்செய்து கொண்டனர். ஆசை காரணமாக அல்ல என்பதை உணர்க. 26. நசை-விருப்பம் அசைவு-தளர்ச்சி 30. பொக்கம்-பொய். "பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்குநிற்கும்" என்பது தமிழ் வேதம்.

## துறவுப் படலம்.

1. கூழ்-பயிர். அற்புரு-அன்பின் வடிவம். 2. திரியா-மாறுபடாத. துழாய்-துளசி மௌலியான்-முடியையுடைய திருமால். தங்கை என்றது உமாதேவியை. "குழலிசை பழகிய மழைமுகில் எழஎழு கொம்பே" என்பது தெய்வக்கவிஞன் வாக்கு. நூபுரம்-சிலம்பு. வேத நூபுரம் தேவிக்குரியது. "வேதங்களொரு நான்கும் மேல்லடிமேல் வியன்சிலம்போ" என்பது பாசவதைப் பரணி. 3. சடையோன்-சிவபிரான். மறைநாயகி-வேதநாயகி. 6. புணை-தெப்பம். துண்ணென-விரைவாக. 7. புரை-குற்றம். பொள்ளென-விரைந்து. புராந்தகி-தேவி. 9. 10 பாட்டுக்கள் நம் அடிகள் துறவறம் மேற்கொள்ளாமைக்குக் காரணம் கூறப் பட்டுள்ளது. 10ம் பாட்டில் "ஆவிற்கு நீர் என்று இரப்பினும்" என்று தொடங்கும் குறட்கருத்து அடங்கி உள்ளது. 12. அடிசில்-உணவு.

14. கனிபறியாமல் காயைப்பறிப்பரோ என்ற இடத்தில் "கனியிருப்பக்காய் கவர்ந்தற்று," "கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வன்," "கனிவரும் காலத்தைய பூக்கொய்யக் கருதலாமோ" என்ற பாக்களை நினைவிற் கொள்க. 16. ஈர்ப்ப இழுத்தலால். 17. சிந்து-கடல். 20. குடிலை-ஓங்காரம். காசினி-பூமி. 23. செஞ்சுடர்-சூரியன். 24. ஏதம்-குற்றம். குரவர்-பெரியார். வித்தகன்-அறிஞன். போது-மலர். 28. புலங்கெழு மாற்றம்-அறிவிற்குப் பொருந்திய சொற்கள். எக்கர்-மணல்மேடு. மங்குல்-மேகம். அங்கணன்-புத்தன். துளங்கல்-தளர்தல்.

## யாத்திரைப் படலம்.

1. பிரமபுரம்-சீர்காழி. சிவஞானம் தந்தாள் என்றது தேவியை. "வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்திற் கறந்தருளி, எண்ணரிய சிவஞானத்தின்னமுதம் குழைத்தருளி, உண்ணடிசில் எனவூட்ட" என்ற பெரியபுராணம் இங்கே சிந்திக்கத்தக்கது.

மருள்நீக்கி-மயக்கத்தைப் போக்கி. உரம்-வன்மை. 2. சுந்தரம்-அழகு. வாதவூர்ப்புனிதன்-மாணிக்க வாசகர். 5. பொழில்-சோலை. 6. தேவியர் என்றது வள்ளி அம்மையாரையும், தெய்வயானை அம்மையாரையும். அருந்தமிழ் என்றது திருமுருகாற்றுப்படையை. "சொற்றெறும் சுரக்கும் அற்றமில் இன்பமும் பட்டாங்கு கிளக்கும் முட்டறு சிறப்பும், கன்னெஞ்சு நெகிழ்த்தும் அன்புறு மொழியும்" (ஒற்றி மும்மணிக்கோவை) கருதித்திருமுருகாற்றுப்படை அருந்தமிழ் என்று சிறப்பிக்கப்பட்டது. இங்கே மூன்றுதமிழ் உரையாசியர்களின் பெயர்கள் தொனிக்கின்றன. 17. கட்டளை-இது தற்போது மாயனூர் என்று வழங்குகிறது.

22. சிவை-உமாதேவி. "எவள்சிவை அவள்சீர் முற்றும் இசைத்திசைத்துருகி வாழ்வாம்" - (குமார சம்பவம்) தோகை வீரன்-மயில் மீதமர்ந்த முருகன். வரை என்றது பழனியை. 23.மேல்வான்பிறை-மேற்குப்பக்கம்தோன்றும்பிறை(வளர்பிறை) 25. சௌந்தர்யலகரி-ஸ்ரீமத் சங்கராசாரியரால் செய்யப்பட்டது. தேவி விரும்பும்நூல் எல்லாவற்றினும் இதுவே தலைசிறந்தது. சொன்னயமும் பொருளாழமும் மிக்கது. பொன்னி-காவிரி.

29. முருகன் கொடியில் விளங்கும் சேவல் வெண்ணிறம் உடையது என்பது கௌமாரமதம். செந்நிறக்குடுமிவெண் சேவற்பதாகையாய்" என்று பகழிக்கூத்தர் கூறுவர். ஆந்திரமும், தமிழும் கலந்து எப்பொழுதும் பேசும் இயல்புடைய நம் அடிகளுக்குப் பழநியில் முருகனை வணங்கியபோது நல்ல தமிழ் வாக்கு உண்டாயிற்று என்று ஸ்ரீ அமிர்தத்தம்மையாரவர்கள் கூறினர்கள்.

## சமாதிப் படலம்.

1. அற்பால்-அன்போடு. சிவை என்றது "ராஜேஸ்வரியை" "நவைதபுமிமய வேந்தன் நல்லற வடிவமாய-சிவை நறும் பிறைபோல் நாளுந் திருவுற வளர்ந்தாள்" என்பது குமாரசம்பவம்.

2. ஒருதுற்ற-ஒரு கவளம். "உண்டருணுங் காலத்திலொருதுற்றுக் காற்றுவால்" என்பது தெய்வக் கவிஞர் பிரான் வாக்கு. 4. மன்ற-உறுதியாக. 5. வண்ணம்-அழகு. நிலக்கிழவன்-ஜமீன்தார். இங்கு "கமலப் பாயலிற் களியிள வன்னம்-பெடைமணந்தன்பிற்பிறழா தொழுகி-நானிலம் வியப்ப நல்லறம் வளர்த்தது" என்ற நாககுமாரகாவிய அடிகள் கருதத் தக்கவை. இதற்குக் குறிப்புப் பொருள் உண்டு. தாமரை-மனம். (வேதாந்தம் தகராலயம் என்று கூறும்) அன்னம்-பிரம்மம். (பரமாத்ம ஸ்வரூபோ ஹம்ஸ:) 7. அது என்றது பிரம்மத்தை. உணர் பெரியோன் என்றது நம் சுவாமிகளை. இங்கே "பூதங்கடோறும் பொன்றுப் பொருளாகி யொன்றாய் நிற்ப தொன்றினை அப்படியே உணரும் உணர்வு" என்றகீதாசாரியரின் திருமொழி நினைக்கத்தக்கது. ஆதரம்-விருப்பம். வழுவில்-குற்ற மில்லாத. 9. துங்கம்-உயர்வு. 12. அல்லல்-துன்பம். நவில்வேன்-கூறுவேன். கேட்டி-கேள். நெல்லைப் பெரியார் திரு. நரசிங்கம் பிள்ளை.

13. கருணாகரன் கருணைக்கு இருப்பிடமானவன். ஞான மூர்த்தி என்றது பிரம்மேந்திரரை. இவன் பிரம்மம் என்ற விடத்தில் "மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே!" (சிவ-போதம்) "பரம் பிரம்மம் இவன் என்றும்......அருள் குருவை வழிபட" (சித்தியார்) என்ற தமிழ் உபநிடதங்கள் கருதத்தக்கன.

14. ஈரம்-அன்பு. "ஈரம்-அளை இ" என்பது தமிழ் மறை. 15. துவராடை-காவியுடை. சொற்ற-கூறிய.

18. அது நீயாய் நினைக என்றது "தத்வமசி" என்ற மகாவாக்கியத்தை. தத்-அதுவாக-த்வம் - நீ - அசி-இருக்கிறாய். இது உபதேச வாக்கியம். இங்கே "அகம்பிரம்மாஸ்மி" "தத்வமஸி" "ப்ரக்ஞானம் பிரம்மம்" "அயம் ஆத்மா பிரம்மம்" என்ற மகா வாக்கியங்கள் நான்கையும் சிந்திக்கவும்.

19. இப்பாவின் பின் இரண்டு அடிகளுடன் "பரத்தை மறைத்தது பார் முதல் பூதம் பரத்தில் மறைந்தது பார் முதல் பூதம்" என்ற திருமூலோப நிடதத்தைப் பொருத்திக் காண்க சகம் - உலகம். 21. கோகநகம்-தாமரை. 21. 22. பாட்டுகள் குளகம். சுமை என்றது உடலை. "பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை" என்பது தெய்வநூல் 24. கால் - காற்று 25. ஏர்-அழகு. ஆராமம்-சோலை.

சுவாமிகள் அறுபத்துமூன்று வருடங்கள் காட்டுப் புத்தூரிலேயே வசித்து வந்தனர். இவரது 120-ஆம் வயதில் குடிசை வாசத்தை விடுத்து முன்னாளில் இவரிடத்து அன்பு பூண்டு ஆதரித்த சந்திரசேகரம் பிள்ளையின் பௌத்திரி பாலாம்பிகையின் வீட்டுத் திண்ணையில் மூன்று மாதங்கள் தங்கினார் என்ற நாராயண பிரம்மேந்திர சுவாமிகளின் சரித்திரப் பகுதியை ஈண்டு நோக்குக.

கலியுகம் 5012 விரோதிகிருது வருஷம் மாசி மாதம் 28-ஆம் தேதி ஆதிவாரம் கேட்டை நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில் பிரம்மேந்திர சுவாமிகள் நித்ய விபூதியில் அந்தர்ப் பவித்தருளினர். 26. சமாதி புனைந்தவர் கருவூர்த் தமிழ் ஆசிரியர் அப்பாவு பிள்ளை. 27. சோதி-சடகோபர் "சடகோபன் [illegible] பண்டு மூன்றாயின" என்பது கம்பநாட்டடிகள் கண்ட [illegible]. 30. ஏர்-எழுச்சி. பிறங்கும்-விளங்குகின்ற.

குறிப்புரை முற்றிற்று.

நலம் தழைக.



ஓம்.

# பிற்சேர்க்கை

**சுவாமிகள் நூல்கள்:—**

சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய அருட்பாக்கள் (பத்யம்) அளவற்றன. இப்பாக்களையெல்லாம் ஒன்று சேர்த்து நூலாக வெளியிட ஓரன்பர் விரும்பினார். விரும்பிய அன்பர் சுவாமிகளை அடுத்து சுவாமிகள் பாடிய பாக்களையெல்லாம் ஓலையேட்டில் வரைந்தனர். அவ்வன்பர் இராக்காலங்களில் அச்சுவடியையே தலையணையாக வைத்துறங்குவர். இவ்வன்பர் இம்மாதிரி எழுதி வைத்திருப்பது சுவாமிகளின் திருவுளத்திற்கு மாறாயிருந்தது.

ஒரு தினம் காலை இவ்வன்பர் நித்திரை நீங்கி வழக்கம் போல் சுவடிக்கட்டை அவிழ்த்துப் பார்க்கையில் ஏடுகள் செல்லரித்திருப்பதைக் கண்டு வியந்து சுவாமிகள் பக்கலடைந்து தனது அபராதத்தை மன்னிக்கும்படி வேண்டினர். அதிலிருந்து மற்றவரும் இவரது அமுத வசனங்களை வரையாதொழிந்தனர்.

**திருமண்காப்பு திருநீறு:—**

தரிசிக்க வந்த ஒருவர் சுவாமிகளே! தாங்கள் விபூதி நாமம் தரியாதது ஏன் என்றனர்.

**சுவாமிகள்:—**

நாமம் போலாகி விட்டேன்
நாற்றப் பிணத்துள்ளே
நாமம் சாற்ற மாட்டேன்
நாடறியத்திருநீறு போலாகிவிட்டேன்
யமன் வந்து தொடமாட்டான்
தாயவனை விடமாட்டான்
தனக்குள் விளையாடச்சொல்லி பார்த்திருப்பாள்
தெரிந்துகொண்டவர் தாம் குரு எனக்கு என்று கூறினார்

**யோக சாதனம்:—**

விஸ்வநாதய்யர் என்பவர் யோகாப்பியாசம் கற்றுக் கொள்ள விரும்பிச் சுவாமிகளை வணங்கி நின்று தம் வாய்திறவா முன்னமே தம் அடிகள் "யாகம் செய்யத் தனமில்லை, யோகம்

செய்யப் பலமில்லை, பூசை செய்யப் பூலோக நாதனுக்குக் காலெங்கே? கையெங்கே? சிரசெங்கே? ஏகாசராத்தில் தெரிந்து கொண்டவர்தாம் குரு எனக்கு" என்றனர்.

**சோதிடப்புலமை:—**

பெரிய வியாதியால் சுகவீனமுற்ற ஒருவன் இம்மடத்தில் தங்கிச் சில மாதங்களில் வியாதி நிவாரணை அடைந்தான். சுவாமிகள் அவனைச் சோதிடநூல் வாசிக்கச் செய்து அதன் பயனால் ஜீவிக்கும்படி செய்தனர்.

**சுவாமிகள் இயல்பு:—**

சுவாமிகள் ஒருவருடனும் அதிக நேரம் உரையாட மாட்டார். தன்னை வந்து சேவிக்கும் அன்பர்களின் பக்குவம் தெரிந்து அவரவர்கட்குத் தக்கபடி நீதிகளைப் போதிப்பார். இல்லறத்தவர்கட்கு வீண்பொழுது போக்காமலும், தத்தம் வேலையில் சோம்பலடையாமலும் அதிக அமைதியாக வருவாய்க்குத்தக்கபடி செலவு செய்து ஈஸ்வர சிந்தனையோடு வாழ வேண்டும் என வற்புறுத்திக் கூறுவார்.

**கைங்கரிய பரர்கள்:—**

திரு. குழந்தைவேல் பிள்ளையால் சுவாமிகளின் சமாதி நிலையத்திற்கு ஒரு மனை கைங்கரியம் செய்யப்பட்டது. காட்டுப் புத்தூர் திரு. மாவடியான் அம்பலக்காரர் ஆயிரம் ரூபாய் விலையுள்ள நிலத்தைக் குருநாதர் மடாலய தருமத்திற்குச் சாசனம் செய்தார். வக்கீல் திரு. உமாபதி பிள்ளையவர்களின் மனைவி ஸ்ரீ உண்ணுமுலையம்மாள் சுவாமிகளின் நித்திய பூசைக்கென ஒருகாணி நிலம் சாசனம் செய்தார். இவர்களும் இவர்களது சந்ததியாரும் செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமாலவன் எங்கும் திருவருள் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு வாழ்க.

பிற்சேர்க்கை முற்றும்.

நலம் தழைக.



## பிரம்மேந்திரர்

# திருப்பாவை.

கம்பராமன்

பிரம்மேந்திர மடாலயம்,

காட்டுப்புத்தூர் * திருச்சி ஜில்லா.



# சமர்ப்பணம்.



நாற்கவிக் கோமான்; பைந்துழாய் மௌலி
        நாரணன் மலரடிக் கன்பன்;
மேற்படு குணத்தன்; தமிழ்வளர்த் தி[illegible]
        வித்தகன்; கருணையொ டெனக்கு
நூற்கட லமுதைச் சுவைத்திட அளித்தோன்;
        நுவலரும் பெரும்புக ழாளன்;
பாற்கட லனைய நம்பெருமாள் பொற்
        பதமலர்க் குரியதிந் நூலே.



ஸ்ரீ

## பிரம்மேந்திரர்

# திருப்பாவை.

---

பொங்கு மழையளித்த பொற்பார் நிலாப்போர்த்துச்
சங்கம் முழங்கத் தமிழ்விளங்க மார்கழித்
திங்கள் புகுந்ததுகாண்! சேயிழையீர்! நம்வினையைப்
பங்கம் படச்சிதைத்த பண்பாளன்; வேட்கூரான்;
எங்கள் பெருமான்; இணையில் பிரமேந்த்ரன்;
துங்கப் புகழ்பாடித் தோழும் துயரகலப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடிப் பழியாய
சங்கையெல்லாம் நீங்கித் தழைத்திடுவோம்! எம்பாவாய்!

நத்தூரும் வாவி நலஞ்சான் றொளிர்காட்டுப்
புத்தூரான்; விண்ணூறும் புகழும் சிறப்புடையான்;
மத்தூர் தயிர்போலெம் வல்வினைகள் ஓடஅருள்
சித்தூரான் பாதத் திறம்பாடி நாம்நோற்பின்
முத்தூர் கடல்நீர் முகந்த கருங்கொண்டற்
கொத்தூர்ந்து பெய்யும்; குறைநீங்கும்; வண்டார்பூந்
தொத்தூர் குழலீர்! தொடக்கும் பிணிபோகும்;
பித்தூர்ந்த நெஞ்சிற் பிறங்கொளியாம்; எம்பாவாய்!

கொண்டலே! சற்றும் குறைவையேல்! நீறுபுனை
எண்டோளன்; முக்கண்ணன்; ஈசன் நிறத்தொடுபோய்த்
தெண்டிரைகள் பொங்கித் ததும்பும் செழுங்கடல்நீர்
உண்டெமையாள் கண்ணன் உருவம்போல் மெய்கருத்து
விண்டலத்தில் மேவி விமலன் பிரமேந்த்ரன்
தொண்டருக்குப் பண்பிற் சுரக்கும் திருவருள்போல்
தண்டுளிபெய் தெங்கும் தழைய வளமுதவி
மண்டலத்து நல்குரவை வாட்டுவாய்! எம்பாவாய்!

செய்ய ஒளிக்குச் செகத்தை யுவந்தளித்து
வெய்ய இருட்படலம் மெல்லவிடை பெற்றதுகாண்!
வையம் கிளர்ந்ததுகாண்! வானம் மலர்ந்ததுகாண்!
பைய விழித்துப் பதுமம் மணந்ததுகாண்!
ஐயன் அமலன் அருளார் பிரமேந்த்ரன்
மெய்யன் புகழ்போல் விடிவெள்ளி வந்ததுகாண்!
தையல்! துயிலுதியோ? சற்றும் உணராயோ?
மைய லகன்றெழுந்து வந்தருள்வாய்! எம்பாவாய்!

வண்ணக் கமலங்கள் வாய்நெகிழ்ந்த; பொற்சுரும்பர்
பண்ணிசைத்துச் செந்தேன் பருகிக் களித்தனகாண்!
விண்ணுந் தெளிந்ததுகாண்! மென்குயில்கள் நன்காற்றிப்
தண்ணென்ற கீதந் தனைக்கரைத்துப் பொங்கினகாண்
ஒண்ணகையாய்! இன்னும் உறங்குதியோ? நன்றாமோ?
அண்ணல் பெரியோன் அருளார் பிரமேந்த்ரன்
புண்ணியன் நற்புகழ்போல் பொய்த்துயில் தேனிக்குமோ?
என்ண உயர்த்துமோ? ஏன்றெழுவாய்! எம்பாவாய்!

தாயன் புடையான் தகைசால் பிரமேந்த்ரன்
நேயம் மணக்கும் நிகரி லடியவர்கள்
மாயை தனைச்செற்று வாட்டுதல்போற் செங்கதிரோன்
தீய விருளைச் சிதைத்தான்; கமலங்கள்
தூயன் திருவருள்போல் தோன்றி மலர்ந்தனகாண்!
சேயிழாய்! நீயுந் துயிலுதியோ? சீரனைத்தும்
பாயற் றுயிலைப் பருகி மறந்தனையோ?
வேயனைய தோளீ! விரைந்தெழுவாய்! எம்பாவாய்!

ஆளுடைய பிள்ளைக் கமுதப்பால் தந்தருளென்
தோளுடையான் கோயிலினும், தோன்றி வழிப்பறிசெய்
வாளுடையாற் கன்பை வகுத்துரைத்தோன் கோயிலினும்,
கோளுடைந்து போகக் குறைநீக்கி யன்பரையாள்
வேளுடைய கோயிலினும், மேலோன் பிரமேந்த்ரன்
தாளுடைய கோயிலினும், சங்கம்முழங்கின; நற்
கேளுடையாய்! முன்னம் கிளர்ந்தெழுப்பு வேனென்ற
சூளுடையாய்! இன்னந் துயிலுதியோ? எம்பாவாய்!

நீதியிற் புகழான் நிறைந்சால் பிரமேந்த்ரன்
போதனையை நெஞ்சிற் பொலிவோ டிடமளித்த
நாதன் புகழ்பாடும் நம்பன் மனமாந்சான்ற
வாதவூ ரன்பன் வழங்குதிரு வெம்பாவை
வேதந் தொடரொரு மெய்யற் றெனமையாண்ட
சீதாற்றுச் சூழ்ந்த திருத்தாமந் தானளித்த
கோதைத் திருப்பாவை - கொழிப்பதுவும் கேட்டிலையோ?
மாதே! துயில்நீங்கி வந்தருள்வாய்! எம்பாவாய்!

போதந் தொடர்வோரைப் பூரணியைத் தான்தொடரும்
நாதன் அருள்வான நம்பன்; பிரமேந்த்ரன்;
சீத வளவயல்சூழ் சித்தூரான்; வேட்கூரான்;
பூதலச்சீர் கொள்காட்டுப் புத்தூரான்; எம்பெருமான்
பாத மலரைப் பரவி வழிபட்டு
வேதனைகள் நீங்கி விளக்கா யொளிராமல்
நீதா னிருட்சிறையிற் சிக்கித் தடுமாறிப்
போதையர் போல் தூங்குதியோ? பெய்வளையாய்! எம்பாவாய்!

ஏடவிழும் பூங்குழலாய்! இன்றும் உறங்குதியோ?
வாடை தனக்குடைந்து வந்துன் கடைபற்றிச்
சூடகஞ்சேர் பொற்கரத்துத் தோழிமார் நின்றுளர்காண்!
மாட மறுகில் மலர்ந்தனகாண்! கோலங்கள்!
நீடு புகழாளர் நேயன் பிரமேந்த்ரன்
தோடொளிரும் பாதத்திற் றோய்ந்தநின் வேல்விழிகள்
மூடுமிருட் சேற்றில் முகிழ்த்திடுதல் நன்றாமோ?
வீடுடையாய்! மெல்ல விழித்தெழுவாய்! எம்பாவாய்!

கம்பன் கவிபோற் கருத்தீர்க்கு மாளிகையில்
செம்பொன் விளக்கந் திகழ்ந்தோங்க வாரணத்துக்
கொம்பிற் சமைந்து குலாவுமொரு மஞ்சத்தில்
அம்புயைபோல் மின்போ லழகொழுகக் கண்வளரும்
கொம்பே! எழுந்தருளாய் கோமளமே! பண்பாளன்
எம்பெருமான் நம்பன் இசைசேர் பிரமேந்த்ரன்
தம்பிரான் கீர்த்தி தனைப்பாடி யாடாதே
வம்பே துயில்தல் வளமாமோ? எம்பாவாய்!

தங்காய்! துயிலுதியோ? சற்றும் உணராயோ?
பொங்குமிருட் சேற்றிற் புதைந்தொழிதல் நன்றாமோ?
கங்குற் கடலின் கரைகண்ட மெய்யடியார்
எங்கும் நிரம்பி யியல்சேர் பிரமேந்த்ரன்
சங்கையறு மெய்ப்புகழைச் சாற்றுவதுங் கேட்டிலையோ?
உங்களை முன்ன முறக்கத் தெழுப்புவனென்
றங்குரைத்தாய்! நாண அலைக்குட் புகுந்தனையோ?
நங்காய்! குறைகூறேம்! நன்கெழுவாய்! எம்பாவாய்!

வாச மலர்க்குழலாய்! நென்னல் மனமுருகப்
பேசரிய சீரான் பிரமேந் திரன்றனக்குத்
தேசொளிரும் தொண்டனைத்தும் செய்குவன்; அனங்கனை;
பூசல் தருமலர்க்குப் புல்லடிமை செய்யேனென்
றாசை ததும்ப வறைந்தாய்! அதுமறந்து
நேசமெலாம் பூவணைபால் நீவைத்தாய்! நன்றாமோ?
நாசந் தவிர்த்தெமையாள் நம்பன் புகழ்பாட
மாசகன்ற நங்காய் மகிழ்ந்தெழுவாய்! எம்பாவாய்!

பூங்குழலாய்! உங்கள் புழைக்கடைத் தோட்டத்து
மாங்குயிலும் வண்டும் வடிக்குமிசை மாதரார்
வாங்குமிடை நோவ வளைசிலம்பு மேகலைகள்
தாங்கலந் தார்ப்பத் தயிர்கடையு மின்னோசை
வேங்கடத்து மேவும் விமலன் திருவடிக்குத்
தீங்கவிதை மாலைபுனை சீரான் பிரமேந்த்ரன்
ஓங்குமெழிற் கோயி லுறுமணியின் பேரோதை
பாங்குடையாய்! கேட்டிலையோ? பாணியேல்! எம்பாவாய்!

சிற்றிடையாய்! மெல்லத் திறப்பாய்! மணிக்கதவம்!
பொற்றொடியே! என்னே! புலர்ந்ததோ? வந்துகாண்!
மற்றவர்கள் வந்தாரோ? வந்தா ருனைத்தவிர.
எற்றுக்குப் பொய்ப்பேச் சியம்புகிறாய்? மெய்பேசக்
கற்றவளே! மேலாங் கருணைப் பிரமேந்த்ரன்
சிற்றடியைச் சூடும் சிரமுடையேம்! எப்போதும்
குற்றங் களிற்படராக் கொள்கையேம்! நாட்போதில்
வெற்றுரை வேண்டா! விரைந்தெழுவாய்! எம்பாவாய்!

மங்கைமார் எல்லாரும் வந்துற்றார்; தெய்வநலச்
செங்கதிரோன் தோன்றித் திசைவிளக்கம் செய்வதன்முன்
பங்கமிலாப் பெம்மான் பரமன் பிரமேந்த்ரன்
பொங்கு கருணைநிகர் பொன்னிப் புனலாடி
எங்குமிலாத் தன்மை யினிதுறுவோம்; நம்வினைகள்
அங்ககலும்; நெஞ்சத் தமுத மழைசொரியும்;
நங்கைமீர்! வாடை நலிவை நினையாதீர்!
இங்கெழுமின் வம்மின்! இசைந்தேலோ ரெம்பாவாய்!

பொங்கும் பிறவிப் புயற்சுரத்திற் றுன்புற்றுப்
பங்க மடைந்த பரிசெல்லாம் போயகலச்
சங்கம் முழங்கு தமிழ்ப்பொன்னி யுட்புக்குச்
செங்கை வளையும் சிலம்பும் கலந்திசைப்பக்
கொங்குண் குழலாடக் கோதைச் சுரும்பார்ப்பத்
துங்கத் துறைபொங்கச் சோதிக் கலன்விம்ம
அங்கங் குளிரநீ ராடிப் பிரமேந்த்ரன்
நங்குரவன் சீரை நயந்திடுவோம்! எம்பாவாய்!

செம்மை யுளத்தாற் றிலகவதிக் கொப்பாய
அம்மைக் கருள்செ யமலா! பிரமேந்த்ரா!
எம்மை யுடைய இறைவா!யாம் நாட்போதில்
வெம்மை யுளப்பிணிகள் வீந்தோட நின்புகழ்கள்
தம்மை நினைந்து தளிர்த்தோம்! உடல்கொள்பிணிச்
சும்மை கரைந்தோடத் தேய்ந்தோம்! தமிழ்ப்பொன்னி!
இம்மைத் துயர்தீர்த் தினித்துயர்கள் வாராமல்
மும்மை நலமருளி முன்னிற்பாய்! எம்பாவாய்!

பூங்கழல்கள் காட்டிப் புவித்தலத்து வந்தருளி
ஏங்கு மடியார் இடரைப் பொடிப்படுத்தும்
பாங்குடையாய்! மேலாம் பரனே! பிரமேந்த்ரா!
யாங்கள் புரிந்தபிழை யத்தனையும் மன்னிப்பாய்!
தீங்கியற்று நெஞ்சத் திறத்தை விரைந்தளிப்பாய்!
ஓங்கிய வருத்து முளத்துயரைத் தீய்த்திடுவாய்!
வாங்கரிய இன்பம் வரையா தளித்தருள்வாய்!
ஈங்குலகு வாழ இனிதருள்வாய்! எம்பாவாய்!

மன்றற் கணையேந்து மாரன் கழைமுறித்த
வென்றிக் களிறே! விமலா! பிரமேந்த்ரா!
இன்றுன் பதத்தி னெழில்கண்டோம்! நின்னருளை
நன்றுற்றோம்! துன்ப நவையகன்றோம்! எம்பகைகளையாய்
பொன்றச் சிதைத்துப் பொலியும்நின் பூங்கழல்கள்
என்றும் பொலிக! எழிலி மழைபொலிக!
வன்றுயரைப் போக்கியருள் வண்தமிழும் நின்புகழும்
ஒன்றி யுலகத் தொளியருள்க! எம்பாவாய்!

வாழி! பிரமேந்த்ரன்! வாழி! அமிர்தத்தாய்!
வாழி! கடலுலகு! வாழி! மழைமுகிலே!

பிரம்மேந்த்ரன் திருவடி வாழ்க!
நலம் தழைக.
ஓம்



ஓம்

# புவனேஸ்வரி அகவல்.

ஓம் மூலத் தெழுந்த மூர்த்தி யாளே
ஞாலம் படைத்த ஞானக் கொழுந்தே
நான்முகன் வடிவாய் ஞாலத் திருந்து
வானுல கெங்கும் வகைவகை யானாய்
கரியமா லென்னுங் காட்சி யானாய்
உரியதோ ருருத்ர னாகி யுகந்தாய்
மகேஸ்வரன் னென்னும் வடிவு மானாய்
தயாநிதி யான சதாசிவம் நீயே
பஞ்ச முகமாய்ப் பாருலகெங்கும்
அஞ்சறி வாகி யனைத்துயி ரானாய்
ஆறு முகமா யசுரர் குலத்தை
வேறு படுத்தும் வித்தகத் தாயே
ஏழு முகம யிரே ழுலகுந்
தாழ்வில் லாத தவப்பய னானாய்
எட்டு முகமா யெண்கலை யாகி
மட்டில் லாத வடிவு மாகினாய்
நவமுக மாகி நால்வகைச் சனனப்
பவமது நீக்கும் பைங்கிளி யாளே
பத்து முகமாய்ப் பாருல கெங்கும்
வித்த பொருளா யுகந்து நிறைந்தாய்
ஓங்காரத்தி லுதித்த பொருளே
ரீங்காரத்தி லினிதிருப்பவளே
ஐயுங் கிலியுஞ் சவ்வுமா னவளே
சவ்வுங்கிலியும் அவ்வுமானவளே
ரீயும்கிரீயும் ஸ்ரீயுமானவளே
ஸ்ரீயும் கிலியும் ரீயுமானவளே
முக்கோ ணத்தில் மூலமந் திரமாய்
அக்கோ ணத்தி லமர்ந்தாய் நீயே
ரும்ரீயும்றாம் றவ்வுமானவளே
றவ்வும் ரீயும்றாம் ருமுமானவளே
சட்கோணத்திற் றுனமர்ந்திருந்து
புட்ப மாரி பொழிந்திட வேதான்

கருணைக் கொடியே காக்ஷிக் கரசே
அருளுதயமான ஆட்சிப் பொருளே
வடுகவடுகி வடுகனுதி
கடுகவா வாவென் கவலைகள்தீர
நமசிவாய நவமணியாளே
வமசியென்னும் வாலாம்பிகையே
சிவாய சிவாய வாசிவாவா
அயாயம்வாரா துடியேனைக்காரும்
அங்கங்கெங்கு மங்குமானவளே
இங்கெங்கெங்கு மிங்குமானவளே
உங்கெங்கெங்கு யுங்கிளியாகி
வங்வங் வங்கும் வங்கிளி வாயால்
சிங்சிங் சிங்கும் சிங்கினிதாயே
சரஅணபவா சயலொளிபவா
பரிபுரபவா பவளொளிபவா
திரிபுரபவா திகழொளிபவா
ஹரி ஹரி ஹரி ஹரிநாரணியே
திரி திரி திரி சிவசாம்பவியே
காளிபந்து கபாலிபந்து
நீலிபந்து நிமிலிபந்து
ஆதிபந்து அனுதபந்து
சோதிபந்து சுந்தரிபந்து
ஓங்கிரூங் காளியே ஆங்கிரூங் காளிநீ
ஓம் நமசிவாய ஓங்காராயி
ஆம் ஹரியென்னும் அக்ஷரப் பொருளை
நமசி வயமான நாதனிடத்தே
இமைப்பொழுதும் நீங்கா திருப்பதுபோல்
எளியேன் வலப்பாகத்தி லென்றுமிருந்து
பழியாம் வறுமை பற்றறுப்பாயே
பகவதியாயி பாபவிநாசகி
அகமதிற்றுதிக்கு மன்பர்க்கெளியாய்
சமயவீரிநீ தக்கன் குழவியாய்
அமயவராகி அங்குசரூபி
காளி காளி கங்காளரூபி
வாழி வாழி வல்பிணி தீர்த்தென்
உளத்திலிருந்த ஊழ்வினையதனை

கழட்டிவிடுவாய் கங்காளரூபி
அகோர அகோர அசுரகுல நாசகி
எக் கலாதேவி யேக பரஞ்சோதி
திக்கெல்லாம் படைத்த செகதீஸ்வரியே
அநுமந்தசக்கரத் தில்லமர்ந்திருந்து
அநுபூதியாகி அவஸ்தை வராகி
நாற்பத்து முக்கோண நாயகியாகி
காக்கும் பொருளை கண்ணுக் கொளியே
ஏகாபரணத் திருக்குநாரணியே
பார் கார் ஊர் சூர் காருண்ய சௌந்தரி
பஞ்சப் பாணப் பார்வதிநீயே
அஞ்சாப்பிணியை அறுக்கும்வடுகி
சத்தாபரணத்திற் றனமர்ந்திருந்து
கர்த்தாவாகிக் காட்சி கொடுப்பாய்
நல்லாபரணத் திருக்குநாரணியே
பவமானதுவை பற்றறுப்பாயே
கோடையிடிபோல் கொம்பனையாளே
வாடைபோலும் வாவா வாவா
சில்லி சூனியம் பெரும்பிணி முதலாய்
அல்லலறுக்கும் ஆரணங்கே நீ
தலைவலிகுளிருந் தாகச்சுரமுங்
சூலைவலி குன்மங் குட்டரோகங்களும்
பெருவயிறலை பெரியவியாதியுங்
கருங்காக்கை வலிப்புங் கடுமுயல் வலிப்புங்
குதிரைவலிப்புங் கொடுநோயானதும்
அதிரப்பறிக்கும் ஆனந்தாயி
ஊனுமுயிரும் நீயாயிருக்க
பீனப்பிணிகள் இடறுகள் வருமோ
இந்திரனக்கினி இயமநிருதி
அந்திவருணன் வாயுகுபேரன்
ஈசானியனு மிருக்கக் காவலாய்
கூசாமலேதான் வருமோ பிணிகள்
தாக்குத்தாக்கு சகலவினைகளைப்
போக்குப்போக்கு பொல்லா வினைகளை
நீக்கியுன்பாத நினைவைக்கொடுத்து
ஆக்கியளிப்பாய் அம்பிகை கௌரி

